# ரமணவழிச் சிந்தனைகள்

ஆங்கில மூலம்

**ஏ. ஆர். நடராஜன்**

தமிழ் மொழிபெயர்ப்பு

**டாக்டர் தி. நா. பிரணதார்த்தி ஹரன்**

பதிப்பாளர்

**ரமண மஹர்ஷி ஸெண்டர் ஃபார் லெர்னிங்**

40/41, II க்ராஸ், லோயர் பாலஸ் ஆர்ச்சர்ட்ஸ்

பெங்களூர் - 560 003 போன்: 36 96 33

© ரமண மஹார்ஷி ஸெண்டர்
ஃபார் லர்னிங், பெங்களூர்.




முதற்பதிப்பு - 1992
1000 பிரதிகள்

ஐ.எஸ்.பி.என்:81-85378-22-3

விலை ரூ. 20/-

This book is published with financial assistance from Thirumala Thirupathi Devasthanams.




கலையமைப்பு:
எம். முரளீதர ஹெக்டே

அச்சகம்:
ஆத்ரேயா ப்ரின்டர்ஸ்
விஜயநகர், பெங்களூர் - 40
போன் - 352036.

# முன்னுரை

நாம் தேடும் அமைதிக்கும் ஆனந்தத்திற்கும் இடையேயுள்ள தடையாது? ஊற்றெடுத்து பெருகும் எண்ணங்களைக் கட்டுப்படுத்த முடியாதது நம் குறையே. எண்ணங்களிலிருந்து நீங்கி சுதந்திரமாக இருக்க நம்மால் முடிவதில்லை. எண்ணங்கள் அற்ற நிலை நம் அனுபவத்திற்கு அப்பாற்பட்டு விளங்குவதால் அதைப்பற்றி நாம் பயப்படுகிறோம். நாம் விரும்புவதெல்லாம் எண்ணங்களிலிருந்து ஒரு பகுதி விடுதலை மட்டுமே. தேவையற்ற எண்ணங்களை ஒதுக்கி, மகிழ்ச்சியான எண்ணங் களோடு வாழ நினைக்கிறோம். இது முடியுமா? மனத்தை எண்ணங்களிடமிருந்து விடுவித்து அதே சமயம் தேவையான பொழுது எண்ணும் ஆற்றலை அதிகப்படுத்த பகுத்தறிவோடு பொருந்திய தீர்வு ஏதாவது இருக்கிறதா?

மனத்தைக் கட்டுப்படுத்த, அதன் இயல்பைக் கண்டறியும் ரமணவழி மிகவும் வலிமையானது. அது தரும் கட்டுப்பாடு நம்மிடமிருந்து இதுவரை மறைந்திருந்த வாழ்வின் அழகை வெளிப் படுத்துகிறது.

ரமணரது உபதேச உந்தியாரிலும், உள்ளது நாற்பதிலும் ஆத்ம விசாரக் கோட்பாடு தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. ஆனால் அதன் செயல்முறைத் திறனை புரிந்து கொள்ள வேண்டுமானால் ரமணரின் உரையாடல்களை நோக்க வேண்டும். அதிர்ஷ்ட வசமாக அவை எல்லாம் தொடக்கத்திலிருந்தே பதிவு செய்யப்பட்டு இருக்கின்றன. அவற்றைக்

கற்கும்போது நம் ஐயங்கள் தெளிவாகும். அவற்றை சிந்தித்தல் பாதையில் உள்ள தடைகளை நீக்கும். சத்குரு அல்லது சாத்திரம் சொல்வதை மனனம் செய்வது என்பது தொன்று தொட்டு வரும் ஒரு மரபு. அது நம்மை உள்நோக்கி அழைத்துச் சென்று தூய ஆனந்தத்தை அளிக்கும்.

இந்தச் சிந்தனைகள் ஒவ்வொரு மாதமும் ரமணவழி பத்திரிகையில் வெளிவந்தவை. சிலரிடம் காணப்பட்ட பொதுப் பிரச்சினைகள் இங்கு எடுத்தாளப்பட்டுள்ளன. மனத்தின் மீதே குறிப்பாகக் கவனம் செலுத்தப்பட்டிருக்கிறது. ஏனெனில் மனமே நம் வாழ்வின் சுகத்திற்குக் காரணம். மனத்தின் பிரச்சினைகளை நீக்க ஃப்ராய்டு முதலிய உளவியல் அறிஞர்களை நாடவேண்டும் என்று கருதப்படுகிறது. ஆனால் மனத்திற்கு உட்பட்ட எந்தத் தீர்வும் நீண்டகாலம் நிலைத்து நிற்காது. மனம் ஓடிப்பிடித்து விளையாடும். அதன் சூழ்ச்சிகளில் நாம் பெரும் பாலும் மாட்டிக்கொள்கிறோம். இருப்பினும் பிரச்சினையின் வேரைப் பிடித்து, மனத்தின் இயற்கையை விசாரிக்கும் போது, அது நம்மை பாதிப்பதில்லை. மனம் என்று தனியாக ஒன்று இல்லை என்பது அப்போது புரியவரும். எண்ணங்கள் இல்லாத போது ஏது மனம்? ரமணர் ஒரு பக்தரிடம் நகைச்சுவையோடு கூறியது போன்று, ‘மனத்திற்கு உருவம் உண்டா என்ன? அதற்கு மீசையும் தாடியும் உண்டா?’ இதைப் புரிந்துகொண்டு ரமணரது தெளிவான வழியில், அவரது வழிகாட்டுதலோடு விசாரத்தை மேற் கொண்டால், மனம் இயற்கையாகவே அமைதியாகும்

நம்மைக் கவலைப்படுத்தும் பிற பிரச்சினைகளும் உண்டு. இந்த வேலை வெறும் இழிபறிதானா? செயலில் ஞானம் என்பது என்ன? சுறு சுறுப்பான அன்றாட நிகழ்ச்சி நிரலில் தியானத்தை எவ்வாறு பொருத்துவது? முயற்சி முடிந்து அருள் வருவது எங்கே? நாம் பிரார்த்தனை செய்வதா வேண்டாமா? கனவுகளும் காட்சிகளும் துணை செய்யுமா? எப்பொழுது முடிவு தெரியும்? எவ்வளவு நாள் காத்திருப்பது? மரணம் என்பது வாழ்வின் முடிவா அல்லது அதன் பின்னரும் வாழ்வு தொடருமா? இவையெல்லாம் இந்த நூலில் சிந்திக்கப்படுகின்றன. அவையெல்லாவற்றையுமே ரமணர் தெளி வாக்கியிருக்கிறார்.

பெங்களூர்
**1992** ஏ. ஆர். நடராஜன்

## நன்றியுரை

ஸ்ரீ ரமணாஸ்ரமம் வெளியீடுகளை உபயோகிக்க அதன் தலைவர் ஸ்ரீ டி. என். வெங்கடராமன் அனுமதியளித்திருக்கிறார். டாக்டர் தி.நா. பிரணதார்த்தி ஹரன் இந்நூலை ஆங்கில மொழியிலிருந்து. மிகச்சரளமாக தமிழில் மொழி பெயர்த்துள்ளார். சுலோசனா நடராஜன் அவர்கள் இறுதி அச்சுத்தாள்களை கவனத்துடன் பார்த்திருக்கிறார். ஸ்ரீ கே. நடேசன் மற்றும் டாக்டர் சாரதா தங்களது அரிய அபிப்பிராயங்களைக் கூறி உதவியிருக்கின்றனர். ஸ்ரீ முரளீதர ஹெக்டே மேலட்டையை இந்நூலுக்கு சிரத்தையுடன் கலையம்சத்தை அமைத்திருக்கிறார் "விஷ்வாஸ் ஸர்விஸஸ்" அழகாக இந்நூலுக்கு "டைப் ஸெட்" செய்திருக்கிறார். "ஆத்ரேயா பிரிண்டர்ஸ்" மிகத்திறமையுடன் இந்நூலை அச்சடித் துள்ளார்கள்.

இவர்கள் அனைவர்க்கும் என் மனமார்ந்த நன்றி.

பெங்களூர்
*1992*

தலைவர்
ரமண மஹர்ஷி
ஸெண்டர் ஃபார் லர்னிங்

# பொருளடக்கம்

# அனுபவம்

"ஆம். அனுபவம் என்பதே வார்த்தை. அறிவு என்பதற்கு எழுவாயும், பயனிலையும் வேண்டும். ஆனால் அனுபவம் என்பது முடிவு அற்றது. நித்தியமானது."

- டாக்ஸ் - 28 - ப. 111

இங்கு கூறப்படும் அனுபவம் என்பது ஆனந்தமாகிய நமது இயல்பான நிலையைக் குறிக்கிறது, அது நமக்குள் இருக்கிறது. வேறு யாரையும் அல்லது எந்தச் சூழலையும் பொறுத்து அது அமைவதில்லை. அதைப் பற்றி நாம் அறிவதெல்லாம் மிகச் சொற்பமே. அதுவும் சாத்திரங்கள் கூறும் சொற்களின் அடிப்படையிலேயே நமது இயல்பு நித்தியமானது, தூய்மையானது, ஆனந்தமானது என்பதைத் தெளிவாக கூறுகின்றன. இருப்பினும் நம்பிக்கையின் அடிப்படை அனுபவத்தின் விளைவாக அமைவதில்லை. இக்கட்டான சூழ்நிலையில் அது குலைந்து போகிறது. எனவேதான் நம்பிகையை விட அனுபவமே தேவை என்கிறார் ரமணர். சந்தேகம் மறைந்திருந்து நம்பிக்கையால் கட்டப்பட்ட கொள்கைகளைத் தகர்த்திவிடும். ஆகவே இதயத்திற்கு அழைத்துச் செல்லும், உள் நோக்கி சூழ்ந்திருக்கும் ஆனந்தத்தின் சுவையினைக் குறித்த விழிப்புணர்வு அவசியம் தேவை.

இங்கு ஒரு கருத்து நிச்சயம் தேவையாகிறது. இங்கு கூறப்படும் அனுபவம் நமக்குப் பழக்கப்பட்ட மற்ற அனுபவங்களிலிருந்து வேறானது. நமக்குத் தெரிந்த அனுபவம் எல்லாம் அறிபவனும் அறிபொருளும் கலப்பதிலோ, ஒன்றாவதிலோ,

ஏற்படுவது. இயல்புநிலை அனுபவத்தில் அறிபவன் மட்டுமே உண்டு. அறிதல் என்பது அகண்டமாக அமைகிறது. அறிதலில் அமையும் இந்த ஒருமை முழுமையானது, வேறு பரிமாணம் கொண்டது. இருப்பினும் அது நம்முடையதே. ஆகவே உள்ளிருந்து வரும் உந்துதல் காரணமாக நாம் எப்போதும் ஈர்க்கப்பட்டு நமதியல்பைக் கண்டறிகிறோம், ஆறு கடலைக் கண்டறிவது போல. ஆனால் அடிக்கடி இறந்த கால பழக்கவழக்கங்களால் நாம் ஈர்க்கப்பட்டு அலைந்து திரிகிறோம். மனத்திலிருந்து இறந்த காலச் சுமைகளை அகற்றி அதனை நடந்து முடிந்ததும் பொருளற்றுப் போகும் இறந்த கால நினைவுகளை நாம் ஏன் இன்னமும் தாங்கிக் கொண்டிருக்கிறோம்? முழுவதுமாக நிகழ்காலத்தில் வாழப் பயின்றால் கவனத்தை இறந்த காலத்திற்கும் எதிர்காலத்திற்குமாகத் திருப்புகிறோமே, ஏன்? பதில் தெளிவாகவே உள்ளது. தெரியாததற்காகத் தெரிந்ததை இழக்க நாம் பயப்படுகிறோம். அவ்வளவுதான். வெளிச்செல்லும் மனத்தின் மகிழ்ச்சி, துயரம் ஆகியவற்றின் அனுபவம் நம் அறிவின் எல்லைக்கு உட்பட்டே விளங்குகிறது. தனது மூலமாகிய இதயத்தில் ஊன்றி நிற்கும் மனத்தைப் பற்றி நமக்கு ஒன்றுமே தெரியாது. இங்குதான் சத்குரு ரமணர் நுழைகிறார். மனித உடலை எடுத்த அவர் தனது நிலைத்த அறிவால் நமது மனத்தை உள்நோக்கித் தள்ளுகிறார். கொந்தளிக்கும் மனத்துடன் அவர் சந்நிதிக்கு வந்த பலர் உடனே அமைதி காண்பார். மாலை வேளைகளில் வேத பாராயணம் நிகழ்ந்தபின் அவரது மௌனசக்தியின் ஆற்றலை உணரலாம் அல்லது ரமணரின் பார்வை ஒன்றே போதும்.

ஆனால் துரதிர்ஷ்டவசமாக அவர் தமது வேலையை முழுமையாகச் செய்ய நாம் அனுபதிப்பதில்லை. பயந்து போன மனம் தனது அச்சத்தை வெளிப்படுத்தும். ரமணர் சாட்விக்கிடம் சொன்னது போல, ஒருமையான வாழ்வை நாம் உணராதவரை பயம் தலை காட்டத்தான் செய்யும். உள்ளே ஆழ்ந்து செல்லுதலே பயத்தைத் தீர்க்கும் மருந்து, வாழ்வின் இனிமையை உணர அது உதவும்.

பகவான் சன்னிதியில் பெற்ற அனுபவம் சில நாட்கள் அல்லது சில மாதங்களே நிலைப்பதாகச் சிலர் முறையிடலாம். இது போன்ற எண்ணங்களை ரமணர் ஆதரிப்பதில்லை. இயற்கையாக உள்ள நமது இயல்பு எங்கிருந்தாலும் வெளிப்படும். அதற்குத் தேவையானது தொடர்ந்த பயிற்சி. அது இடைவிடாது நிகழ வேண்டும். அதுவே சத்குரு ரமணர் வார்த்தையில் நாம் காட்டும் நம்பிக்கை. தமது உலகம் தழுவிய நிலையை நமக்கு நினைவுபடுத்தி நம்மை ஊக்குவிப்பார் அவர். "பகவானது திருவடிகள் எங்கும் இருக்கின்றன. அவர் திருவடியைத் தவிர வேறு எங்கு நீங்கள் கூட முடியும்?" என்று அவர் கேட்கிறார். இலண்டன் சென்று கொண்டிருந்த திருமதி மெர்ஸ்டனிடம் கூறியது போலப் பகவானை இதயத்தில் எடுத்துச் செல்லும்படி' கூறுவார் அவர். நமக்கும் அது பொருந்தும். நம் சாதனை இடைவிடாது உறுதியாக நிகழ அவரது நீட்டிய கரங்கள்' எப்போதும் உதவி செய்யும்,

பின், உள்திரும்பிய மனத்திற்கு நிகழும் இடையிட்ட அனுபவம் என்னும் பிரச்சனை

இருக்கிறது. உள்ளே நிரந்தரமாகத் தங்க முடியாமல் மனம் மறுபடியும் வெளிக்கிளம்புகிறது. இலக்கிலிருந்து விலகி நிற்கும் மனம் ஓர் தடையாக வேண்டாம். அக அனுபவம் ஒரு முறை சுவைக்கப் பட்டால். மற்ற எல்லாம் சிறப்பிழந்து போகின்றன. சாத்திரங்கள் விளக்கமாகக் கூறும் சுக அனுபவத்தை மீண்டும் அனுபவிக்க முடியும். சத்குருவிற்கு, முழுமையான உணர்விற்கு உணவாக நாம் தயாராஞல் பிரிந்தியங்கும் நம் தனித் தனமை நீங்கி, உலகப் பொதுமையை உணரலாம். ஆனந்தமே வாழ்வின் அடிப்படை என்ற சாத்திரக் கூற்று உண்மையாகிறது. பின், எப்பொழுதும் ஆனந்தத்தில் மூழ்கிப்போகிறோம்.

* * * *

# ஒளியும் நிழலும்

*மனம் என்பது என்ன? சித்தும் சங்கல்பமும் கலந்த கலவையே அது. எனவே அது கண்ணாடியாகவும், ஒளியாகவும், இருளாகவும், சிந்தனையாகவும் விளங்குகிறது.*

*- டாக்ஸ். பக். 541, 589.*

மே 1935லிருந்து ஏப்ரல் 1939 வரை உள்ள காலகட்டத்தை "டாக்ஸ்"லிருந்து நாம் அறிய முடிகிறது. தங்கள் ஆன்மீக தாகத்தைத் தணித்துகொள்ள மகரிஷியிடம் வந்தவர் பலர். சிலர் வீட்டை துறந்து, உண்மையை அறியக் காவியுடை அணிந்தனர். சிலர் சாத்திரம் கற்ற நல்ல அறிஞர்கள். சிலர் இல்லறத்திலிருந்து குடும்ப வாழ்க்கையின் தொல்லைக்கு உள்ளானவர்கள். உழவர்கள், மாடு மேய்ப்பவர்கள் போன்ற எளியமக்களும் அவரிடத்தில் வந்தனர். ஆனால் இந்த ஐந்து ஆண்டுகளில் அவரிடம் கேட்கப்பட்ட கேள்விகளில் ஒரு பொதுத்தன்மை உண்டு. மனிதனைப் பாதிக்கும் மிக முக்கியமான சிக்கல் மனத்தை எப்படி அடக்குவது என்பதே. பல ஆண்டுகள் பயிற்சி செய்தும் மனத்தை கட்டுக்குள் கொண்டுவர முடிவதில்லை. மனத்தை ஒரே எண்ணத்தால் நிரப்பிக்கொள்வது என்பதும் ஒரு போராட்டம்தான்.

ரமணருடைய பதில், கேட்பவரைப் பொறுத்தே அமையும். ஒவ்வொருவருக்கும் ஒரு பயிற்சி முறை உண்டு. ஒருவருக்கு எளிமையாக இருப்பது இன்னொருவருக்கு கடினமாகலாம். ஒவ்வொரு வருக்கும் ஒரு பின்புலமும் உண்டு. அதை அனுசரித்தே அவர் பதில் சொல்லுவார். மனத்தை

ஒருமுகப்படுத்தி இலக்குக்கு அழைத்துச் செல்வதே அவரது குறிக்கோள். நாம் ஜபத்தின் மகிமையை நம்புவோருக்கு ரமணர் நாமதேவர் அல்லது துக்காராம் கதையை எடுத்துக் கூறுவார். ஓர் ஏழைக் குடியானவனுக்கு சிவநாம ஜபத்தை உபதேசித்தார். அறிஞர்களின் ஐயங்களை விரிவாக அகற்றிய பின் அவர், இறுதியில் எல்லாக் கல்வியுமே மறக்கப்படவேண்டும். ஏனெனில் உண்மை இரட்டைகளைக் கடந்து நிற்கிறது என்பதை வலியுறுத்துவார். இவ்வாறு ஒவ்வொருவரையும் அவர்களுடைய வழியிலேயே அழைத்துச்சென்று உள்நோக்கி ஆள்வதில் பயிற்சி கொடுப்பார்.

மனத்தை அடக்க நிச்சயமான வழி அது என்ன என்று அறிவதே என்பதை ரமணர் ஒருபோதும் வலியுறுத்த தவறியதில்லை. மனத்தின் இயல்பை அறிவதே நேரான வழி. மனத்தின் மூலத்தை விசாரித்து அறியும் போது உண்மை வெளிப்படுகிறது. இவ்வாறு சொல்லி விட்டு, மனத்தைப் பற்றி நாம் கற்பனை செய்வதை அவர் அனுமதிக்க மாட்டார். எனவே மனம் என்றால் என்ன என்பதை அவரே விளக்குகிறார். ரமணர் மனத்தைப் பற்றி சொன்னவை குறித்து சிந்திக்கும் போது மனம் என்பது இருவிதமான எண்ணங்களையுடையது என்று கூறலாம். ஒன்று, நான் என்ற எண்ணம் (அகந்தை). மற்றது, வேறு எண்ணங்கள். நான் என்ற எண்ணம் இதயத்திலிருந்து தோன்றுகிறது. ஒருவரை மற்றவரிடமிருந்து பிரிப்பதும் அதுவே. மனத்திற்கு ஒளிதரும் பகுதியும் அதுவே. மற்ற எண்ணங்களெல்லாம் இறந்த காலத்தின் பதிவுகளே. அவை மனத்தின் இருள்மிக்க

பகுதியைக் குறிக்கும். ஆகவே அகந்தையை மற்ற எண்ணங்களிருந்து பிரிப்பதே முதல்படியாகும். மனத்தை மற்ற எண்ணங்களில் செலுத்ததாதபோது இது சாத்தியமாகிறது. நம் கவனம் இல்லாது போனால் மற்ற எண்ணங்கள் இருக்கமுடியாது.

மனத்தில் இலக்கை நிலையாக காண்பது நல்லது. மனக்கட்டுப்பாடு என்று வரும்போது மனத்தின் ஆற்றலை முழுவதும். பயன்படுத்துவதே முடிவு ஆகும். நமக்குக் கிடைக்கும் ஒரே சக்தி மூலம் அதுவே. நனவின் போது முழுவதுமாக நாம் அதனையே பயன் படுத்துகிறோம். இருப்பினும். மனத்தின் முழு ஆற்றலையும் நம்மால் பயன்படுத்த முடிவதில்லை. ஏனெனில், மனம் பலவிதமான எண்ணங்களில் பிளவு பட்டு அதன் ஆற்றல் வீணாகிப்போகிறது. நாம் விரும்பாத எண்ணங்கள் பல இருப்பினும் இறந்த காலத்தில் நாம் அவற்றை ஆதரித்ததால் அவற்றின் பதிவு இன்னமும் இருக்கிறது. மேலும் நாம் பலவிதமான எண்ணங்களில் ஈடுபடுகிறோம். அவை சிலசமயம் செயல்களாக உருவெடுக்கின்றன. தேவையான எண்ணம் தேவையற்ற எண்ணத்தால் வெளியே தள்ளப்படுகிறது. ஆகவே எண்ணங்களின் தொல்லையிலிருந்து நாம் விடுபடச் சிறந்த வழியொன்றை கண்டுபிடிக்கவேண்டும். அதில்தான் வெற்றியின் ரகசியமே அடங்கியிருக்கிறது.

அத்தகைய விருப்பம் இயற்கையானதுதான். இருப்பினும் சில எண்ணங்களைப் பற்றிகொள்வதும், சிலவற்றை விட்டு விடுவதும் தவறுதான். எனவேதான் எல்லா எண்ணங்களுமே

துயரமானவை என்கிறார் ரமணர். எல்லா எண்ணங்களுமே ஒரே அடைப்புக்குறியுள் அடங்கும். சில எண்ணங்களை ஏற்றுக் கொள்ளும் முயற்சி நம்மை அறியாமலேயே மனத்திற்குள் பதிந்துவிடும். அப்போது முயற்சி உரிய பாதையிலிருந்து விலகி போகும். எனவே அதை "நான்" என்ற எண்ணத்துக்கு மறுபடியும் கொண்டுவரவேண்டும்.

எனவே எல்லா எண்ணங்களுக்கும் ஒரு நிலையே தரப்படவேண்டும், என்கிறார் ரமணர். எல்லா எண்ணங்களுக்குமே உரிய இடம் குப்பைத் தொட்டிதான். அவற்றிற்கு ஏன் உயிர் தரவேண்டும். அவற்றை ஏன் மீண்டும் தழைக்கச் செய்யவேண்டும்.

மனத்தின் உணர்வுப் பகுதியை நாம் கவனிக்க வேண்டும். அதற்கே முக்கியத்துவம் தரவேண்டும். கவனம் முழுவதுமே எண்ணத்திற்கு தராமல் எண்ணுகின்றவனுக்குத் தரவேண்டும். அதற்கான வழிமுறைகளை கட்டாயம் கற்க வேண்டும். பிரித்தறியும் உணர்வு எங்கிருந்து வருகிறது என்று விசாரிக்கும் போது, மனம் உள்ளேயே தங்கி நிற்கும், வலிமையைப் பெறுகிறது. விளைவாக முழு உணர்வை அது பிரதிபலிக்கும். அப்போது. மனத்தின் இருட்டுப் பகுதியை மற்ற எண்ணங்களெல்லாம் தேவையற்றுச் சிதைந்து போகும். மனத்தின் ஒளி திகழும் அது ஒவ்வொரு செயலிலும் முழுமையை அடைய நமக்கு உதவி செய்யும். சுதந்திரமான மனத்தின் தூய ஒளி இவ்வளவு வல்லமை படைத்தது.

* * * *

# நேரான பாதை

பக்தர்: மனத்தை பற்றி குறிப்பிட்டு சொல்வது மிகவும் கடினம். எல்லோருமே இப்படி கஷ்டப்படுகிறார்கள்.

பகவான்: மனம், அகந்தை, புத்தி எல்லாமே ஒன்றையே குறிக்கும் பல பெயர்கள். மனம் என்பது எண்ணங்களின் கூட்டம். அகந்தையில்லாமல் எண்ணங்கள் இருக்க முடியாது. எனவே எல்லா எண்ணங்களும் அகந்தையால் உருவாகின்றன. நான் என்பது எங்கிருந்து உதயமாகிறது என்பதைக் கண்டுபிடியுங்கள்; மற்ற எண்ணங்கள் மறைந்து போகும்.

- டாக்ஸ் - 473 பக். 449-450

நம் மனம் துவைத எண்ணத்திலேயே பழக்கப்பட்டுபோனது. எழுவாய், செயப்படுபொருள் ஆகியவற்றில் எழுவாயைக் கவனிக்கச் சொன்னால் அது குழப்பமடைகிறது. மனத்தில் பலவிதமான எண்ணங்கள் பெருகி நிற்கும்போது நாம் வெறுப்படைகிறோம். இது, தேவையான எண்ணங்களை வைத்துக்கொண்டு, மற்றவற்றை புறக்கணிக்க நினைப்பதன் விளைவு ஆகும். விருப்பும், வெறுப்பும் மனிதருக்கு மனிதர் வேறுபடும். ஆகவே தேவையற்ற எண்ணங்களை நீக்குதல் என்பது கடல் தண்ணீரை அகப்பையால் எடுத்து கடலை வற்றச் செய்வதற்கு ஒப்பாகும். ஆறுகள் சென்று கலக்கும் வரை கடல் வற்றுமா என்ன? அது போலவே விருப்பத்தோடு சேர்ந்த செயல் நம்முள் பதிவுகளை

விட்டுச் செல்லும் போது, அவை ஒன்று சேர்ந்து மனம் என்று ஏற்படுகிறது. எண்ணங்கள் கங்கையைப் போல் வற்றாதவை. ஆகவே எண்ணங்கள் அற்ற நிலையை உருவாக்க நாம் தற்பொழுது மேற்கொள்ளும் அணுகுமுறையை மாற்ற வேண்டுமா என்ற கேள்வி எழும்.

எண்ணங்களை அப்படியே ஒதுக்கச் சொல்லுகிறார் ரமணர். அதற்கான வழிமுறைகளையும் அவர் எடுத்துரைக்கிறார். முதல் படியாக எண்ணங்கள் உருவாகும் சூழ்நிலையை அவர் பரிசோதனை செய்யச் சொல்லுகிறார். எண்ணங்கள் எப்படி பெருகுகின்றன, அவற்றை பட்டினி போடுவது எவ்வாறு என்ற கேள்விகளை எழுப்பிக்கொண்டு, புதிய எண்ணங்களால் தான் மனம் பெருக்கமடைகிறது என்கிறார் அவர். எனவே எண்ணங்களாலாகிய உலகத்தைச் சக்தியற்றதாக ஆக்கி, எண்ணங்கள் எழுவதை தடைசெய்வதே நம்முடைய முயற்சியாக அமைய வேண்டும்.

எண்ணங்களுக்கு உயிரூட்டுவது எது என்பதே அடுத்த கேள்வி. நம்முடைய கவனம்தான்என்பதை அனுபவம் உணர்த்தும். தனிமனித கவனம் இல்லாது போனால் எண்ணம் எழாது. விமான நிலையம் அல்லது ரயில்பாதை அருகே வசிப்பவர்களுக்கு அந்தச் சத்தம் கேட்பதில்லை, எனெனில் அவர்கள் அந்தச் சத்தத்தை இலட்சியம் செய்வதில்லை. நகைச்சுவை கதையிலோ அல்லது கிரிக்கெட் போட்டியைப் பார்க்கும் போதோ அல்லது தொலைக்காட்சியில் தொடர் நிகழ்ச்சியை காணும் போதோ குழந்தை வேறொன்றையும்

கவனிப்பதில்லை. இதுபோல பல உதாரணங்களை எடுத்துக் காட்டலாம். ஆகவே நம்முடைய கவனம் இருக்கும் வரையில்தான் வாசனைகள் வெளிக்கிளம்பும் என்பது தெளிவாகிறது. இல்லையேல் அவை செயலற்றுக் கிடக்கின்றன.

மற்ற எண்ணங்கள் அகந்தையைப் பற்றியே நிற்கின்றன; ஆனால் அகந்தைமட்டும் அதனுடைய மூலத்திலிருந்து சக்தியை தேடிக் கொள்கிறது. உணர்வு இதயத்திலிருந்து சக்தியை தேடிக் கொள்கிறது. உணர்வு இதயத்திலிருந்து மனத்திற்கும் பின்னர் உடம்பிற்கும் எவ்வாறு பரவுகிறது என்பது பற்றி ரமணகீதையில் ரமணர் விளக்கமாக கூறியிருக்கிறார். இதயத்திலிருந்து பலவிதமான நாடிகளின் வழியாக மனத்திற்கும் உடலிற்கும் உணர்வு பரவுகிறது. முதல் நிலையில், எழுந்தவுடன் உணர்வு சுதந்திரமாகவே இருக்கிறது. அது தன்னை தனிமைப்படுத்திக் கொள்ளும்போது கட்டுப் பாட்டுக்கு உள்ளாகிறது. பொதுச் சக்தியாகிய உணர்வு முதலில் அகந்தையோடும் பின்னர் மற்ற எண்ணங்களோடும் தொடர்பு கொள்கிறது. எனவே இந்த வழியை நாம் தலைகீழாகத் திருப்பவேண்டும் என்கிறார் ரமணர். பின்னோக்கிச் செல்லும் இந்த இயக்கம் எண்ணத்திலிருந்து நினைப்பவருக்கும், பின் நினைப்பவரிலிருந்து உணர்விற்கும், இறுதியாக மூலத்தானமாகிய இதயத்திற்கும் செல்கிறது. மனத்தை உள்நோக்கி திருப்பி, உணர்வின் முழுமை பிராந்தியத்திற்குள் செலுத்துவதே சாதனையாக அமையும். உதித்த இடத்திலேயே நிலையாக நிற்க வேண்டும். எனவே உணர்வு எழுந்து அகந்தையாகிய

தனிச்சக்தியில் கலந்தவுடன் அதை பின்னோக்கித் திருப்பவேண்டும்.

ரமணரின் இந்த எளிய வழி எப்படி சாத்தியமாகும் என்ற கேள்வி எழலாம். குவியலாக தேங்கி கிடக்கும் எண்ணங்களை எவ்வாறு புறக்கணிப்பது? நாம் நினைப்பதுபோல் இச்செயல் ஒன்றும் அவ்வளவு கடினமில்லை. செயலில் உறுதியிருந்தால் ஆன்ம விசாரம் தூய்மைப் படுத்தும் வேலையைச் செய்யும். எனவேதான் ரமணர் விசாரம் செய்யும்படி எல்லோரையும் ஊக்குவித்தார். அதை செய்வது மிகவும் கஷ்டமாகயிருக்கிறது என்று பக்தர் ஒருவர் முறையிட்டபோது, “செய்து பாருங்கள், கடினமில்லை என்பதை உணர்வீர்கள்”. “நம்பிக்கை இருந்ததால் பலர் அதில் வெற்றி பெற்றிருக் கிறார்கள்,” என்று இன்னொருவருக்கு அவர் கூறினார். “அலைபாயும் தன்மை யாருக்கு என்று விசாரியுங்கள்”, என்று இன்னொருவருக்கு அவர் அறிவுரை கூறினார். தூய்மையின் வளர்ச்சி என்பது, கவனிக்கப்படாவிட்டாலும், வளர்ந்து கொண்டே இருக்கும், பரவிக்கிடக்கும் அகந்தை இறுதியில் தூய உணர்வால் போக்கப்படும்.

எண்ணங்கள் அற்ற நிலை எவ்வாறு இருக்கும் என்ற கேள்வி எழலாம். நாம் உள்ளே மூழ்கும் போது உலகத்தின் நிலை எவ்வாறு இருக்கும்? எண்ணங்களிலிருந்து விடுதலைப் பெற்று நிற்பது என்பது மரத்துப் போன நிலை அன்று. எண்ணங்களின் தொல்லையிலிருந்து நாம் விடுதலை பெறுகிறோம், அவ்வளவே. வாழ்க்கையில் புத்துணர்ச்சியை நாம் இழப்பதில்லை. தேவை

ஏற்படும்போது உரிய எண்ணங்கள் தாமாகவே வெளிப்படும். தேவை முடிந்தபின் அவை தாமாகவே மறையும். அதாவது எண்ணங்களின் தொடர்ச்சி முற்றுப் பெறும். நம்மை நாமே பிரித்துக் கொள்ளும் தனிமையிலிருந்து விடுதலை பெறுகிறோம். உலகத்தில் சுதந்திரமாக விளையாடுகிறோம்.

* * * *

# அமைதியான மனம்

பக்தர்: மனத்தை எவ்வளவு காலம் இதயத்தில் வைத்திருக்க முடியும்?

மகரிஷி: சாதனையின் மூலம் அந்த காலம் விரிவடையும்.

பக்தர்: அதில் இறுதியில் என்ன ஏற்படுகிறது?

மகரிஷி: இதயத்தில் உள்ள ஒருமைக்குப் பதிலாக பலவிதமான நிகழ்ச்சிகள் தோன்றும். இதற்குத்தான் வெளிச் செல்லும் மனம் என்று பெயர். இதயத்தை நோக்கிச் செல்லும் மனம் அமைதியான மனம் என்று அழைக்கப்படும்.

- டாக்ஸ் - 27 ப. 27.

பயணத்தின் இறுதியில் என்ன நேரிடும் என்று நாம் அறிய விரும்புவது இயற்கையே. நம் வாழ்வு எந்த விதத்தில் வேறுபட்டு இருக்கும்? மனம் எவ்வாறு வேலை செய்யும்? நமது பழைய மடமைகளும் கற்பனைகளும் பின்னால் வருமோ? விரும்பும் இலக்கை நாம் எவ்வாறு அடைவது? இவை முதலிலும் செல்லும் வழியிலும் ஏற்படக்கூடிய சில ஐயங்கள்.

மௌனமும் அமைதியுமே நம்முடைய இயல்பு ஆகும். நாம் அந்நிலையில் நிலைத்து நிற்கத் தடையாக உள்ளவற்றை முறையாக வேறறுக்கவே ஆன்மீக சாதனை தேவைப்படுகிறது. நம் உணர்வின் மீது நம்மை நாமே தனிமைப்படுத்திக் கொள்ளும் அகந்தையே அடிப்படைப் பிரச்சினை ஆகும். நம்மை

பிரித்தாலும் சூழ்ச்சியை செய்வது மனமே. அத்தகைய மனம் வெளியில் எப்போதும் மகிழ்ச்சியைத் தேடுகிறது. ஆனால், உள் நோக்கித் திரும்பி சுகத்தின் சுவையை அறிய ஆரம்பித்ததும் மனம் தானாகவே உள்ளே நிலைத்திருந்து மகிழ்ச்சியை அனுபவிக்கிறது.

ஆகவே ஆன்மீக வாழ்க்கை என்பது மனத்தின் வெளிச் செல்லும் போக்கிற்கும், அதன் உட்செல்லும் தன்மைக்கும் இடையே உள்ள இடைவெளியை நீக்குவது ஆகும். அல்லது மனத்தின் அடிப்படையில் அமைந்த வாழ்க்கையிலிருந்து நீங்கி, இதயத்தில் நிலைத்து நிற்கும் வாழ்வைப் பற்றிக் கூறுவதே அது என்று கூறலாம்.

இதயத்தில் நிலைத்து நிற்கும் மனத்திற்கு அடையாளம் பொறுமையே என்கிறார் ரமணர். வேறுபாடு என்பதே இல்லையென்று கூறமுடியாது. ஆனால் அதன் பெருக்கமும் சூழ்ச்சியும் நம் அடிப்படையைப் பாதிக்காது. செய்தித்தாளில் ஒருவர் காகிதத்தை மட்டுமே காண்கிறார். தங்க நகையில் தங்கம் மட்டுமே தெரிகிறது. சர்க்கரை பொம்மையில் சர்க்கரை மட்டுமே உணரப்படுகிறது. இவற்றிலெல்லாம் உருவங்கள் உணரப்படுவதில்லை. வெளிக்கிளம்பும் மனம் வேறுபாட்டையும் பன்மையையும் மட்டுமே கண்டு அதில் தன்னை இழந்து விடுகிறது. அதன் கவனம் குழந்தையைப் போல சிறிது நேரம் ஒன்றைப் பற்றி நின்று, பின்னர் அதை விட்டுவிட்டு வேறொன்றைப் பற்றி நிற்கின்றது.

திசை திரும்பிய மனத்தை இதயத்தை நோக்கித் திருப்புவதில் தான் திறமையிருக்கிறது. எங்கிருந்து நம்

கவனம் திசை திருப்பப்படுகிறது என்று கவனிக்கும் போது, நம்மைச் சூழ்ந்து நிற்கும் வாசனைகளை நாம் முற்றுகையிட முடியும். ஒவ்வோரு எண்ணம் எழும்போதும், அந்த எண்ணம் யாருக்கு எழுகிறது என்று விசாரிக்கும்போது அந்த எண்ணம் பறந்து விடுகிறது. ஒவ்வொரு எண்ணத்தையும், காத்திருந்து பகைவனை வெல்வதைப் போல் நாம் தாக்க வேண்டும். இப்படி மனத்தைப் படிப்படியாக வலிமைப் படுத்தினால் அது பாதை தவறாமல் தன் மூலத்திற்குச் செல்லும் எதிரியின் கோட்டையை முற்றுகையிட்டு, கோட்டையின் உள்ளிருந்து ஒவ்வொருவனாக வரும் பகைவனை அழிப்பதைப் போல, ஒவ்வொரு எண்ணத்தையும் அழிக்க வேண்டும் என்று உதாரணிப்பர் ரமணர். நம்மை கவனிப்பது என்பது எண்ணங்களை நீக்குவது மட்டுமே அன்று; எனினும் சாதனையில் தொடக்கமாக ஒவ்வொரு எண்ணத்தையும் நாம் கேள்வி கேட்டுத் தான் ஆக வேண்டும். அப்போதுதான் அதன் திசைதிருப்பும் வலிமை குன்றும்.

இவ்வாறு பின்னோக்கி இதயத்திற்குச் செல்லும் இவ்வழியில் நாம் நமக்குக் கிடைக்கும் ஒவ்வொரு ஆயுதத்தையும் பயன்படுத்த வேண்டும். கவனக் குறைவினால் இலக்கைத் தவறவிடக்கூடாது. ஆரம்பத்திலோ அல்லது மனம் பலவீனமாக இருக்கும்போதோ மூச்சின் மீது கவனம் செலுத்தலாம். ரமணர் இதனை 'இயற்கை மயக்க மருந்து' என்பர். மூச்சின் மீது கவனம் செலுத்தப் படும் போது மனம் வெளிப் பொருள் மீது தாவிக் குதிக்காது. ஆக இந்த லாபத்தை நாம் மனத்தை உள்நோக்கி தள்ளுவதற்குப் பயன்படுத்த வேண்டும்.

ஒரு வார்த்தையோ அல்லது ரமணரைப் பற்றிய புத்தகமோ மனத்தை ஒருமுகப்படுத்தினால் அதை நாம் ஏற்றுக் கொள்ளலாம். அது போலவே ரமணரைப் பற்றிய இசை அல்லது நாட்டியத்தையும் நாம் பயன்படுத்தலாம். எப்படி இருப்பினும் உள்ளே நிலைத்து நிற்பது என்பது முக்கியமானது. அதற்கான எந்த வழியும் நல்லது தான். ஒவ்வொரு மனமும் தனித்தன்மைப் படைத்தது. அதன் இயல்பைப் பற்றி இறைவனுக்குத்தான் தெரியும்!

இதயத்தில் தங்கி இருக்க வேண்டும் என்ற விருப்பம் மிகவும் வலிமையுடையதாக இருக்க வேண்டும். தாயைப் பற்றி நிற்க விரும்பும் குழந்தையைப் போல அது அமைய வேண்டும். அந்த விருப்பத்தின் வலிமை மற்ற எண்ணங்களை யெல்லாம் ஒரே வீச்சில் வெட்டி வீழ்த்த வேண்டும். உள்நோக்கிச் சென்று அதிக நேரம் தங்கத் தங்க நாம் சரியான வழியில் தான் செல்கிறோம் என்ற உறுதிப்பாடு உண்டாகும். பின் ரமணரே உண்மையான வழிகாட்டி ஆவார்.

* * * *

# நீங்கள் இங்கு எதற்காக வந்திருக்கிறீர்கள் ?

அனந்தப்பூரிலிருந்து வந்த வயதான மனிதர் ஒருவர், ஹாலில் வேதபாராயணத்தைக் கேட்டப் பிறகு எழுந்து நின்று, "பிராமணர் அல்லாதவர் வேதங்களைக் கேட்கக் கூடாது என்கிறார்களே", என்றுக் கேட்டார்.

மகரிஷி: உங்கள் வேலையைக் கவனியுங்கள் நீங்கள் எதற்காக வந்திருக்கிறீர்கள் என்பதை உணருங்கள். இது போன்ற செயல்களில் உங்கள் நேரத்தை என் வீணடிக்கிறீர்கள்? வேதத்தை, நான் கேட்டேன் என்கிறீர்கள். இங்கு நான் என்பது யார்? அது பற்றி அறியாமலேயே இந்த வார்த்தையைப் பயன்படுத்துகிறீர்கள். அதன் முக்கியத்துவம் புரிந்தால் எந்த சந்தேகமும் எழாது. முதலில் நான் என்பதைக் கண்டுபிடியுங்கள், மற்றவற்றைப் பற்றி அப்புறம் பேசலாம்'.

- டாக்ஸ் 161 ப. 137

ரமணாஸ்ரமத்தில் பகவான் முன்னால் ஹாலில் காலையும் மாலையும் வேத பாராயணம் நடைபெறும். சாதகர்களுக்கு அந்தச் சூழ்நிலை உதவி செய்யும். இருப்பினும் தாம் வந்த காரியத்தை மறந்து இந்த அன்பர் ஒரு கேள்வியைக் கேட்டுவிட்டார். அவருடைய சந்தேகம் வழக்கமாக நிகழக்கூடிய ஒன்றுதான். நம் மனங்களிலும் இது நிகழக்கூடி யதுதான். இது போன்ற காலத்தை வீணடிக்கும்

கேள்விகளில் நேரம் வீணாகிறது. உண்மையைத் தேடி ரமணர் சந்நிதிக்கு வரும் அன்பர்களிடத்து இது போன்ற சந்தேகம் எழுவது வருத்தத்திற்குரியது. இதனால் அவர்கள் கவனம் சிதறிப் போகிறது. உண்மையைக் கண்டுபிடிப்பதில் கவனத்தைச் செலுத்தாமல் தேவையில்லாமல் பெயருக்கும் உருவத்திற்கும் முக்கியத்துவம் தரப்படுகிறது. தேவையில்லாத ஒன்று இது.

ரமணரிடம் எழுப்பப்பட்ட சில சந்தேகங்களை நோக்குவோம். ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் மறைவு குறித்து இரு பக்தர்கள் மிகவும் வருத்தப்பட்டார்கள். ரமணர் முன்னிலையில் அதுபற்றி பேசவும் ஆரம்பித்தார்கள். ஜார்ஜ் மன்னர் அவர்களுக்கு உறவினர் ஆகமாட்டார். இருப்பினும் பகவான் சந்நிதியில் அவர்கள் நேரத்தை வீணடித்துக் கொண்டிருந்தனர். இறுதியில் ரமணர், யார் இறந்தால் உங்களுக்கு என்ன? நீங்கள் இறந்து அன்போடு ஒன்றாகுங்கள்," என்று கூறினார்.

ஞானியின் உடம்பு வசிஷ்டருக்கும் விஸ்வாமித்தருக்கும் போல மறைந்து போகுமா அல்லது என்ன ஆகும் என்று அடிக்கடி பக்தர்கள் ரமணரைக் கேட்பதுண்டு. அவர்களுக்கெல்லாம் ரமணர், "உங்கள் ஆர்வம் அதுவா? ஏன் மற்றவற்றைப் பற்றி கவலைப்படுகிறீர்கள்? நீங்கள் இந்த உடம்பு இல்லை. ஆகவே உடம்பு தோன்றினால் என்ன, மறைந்தால் என்ன?" என்று பதில் கூறுவார். சாத்திர அறிவின் அடிப்படையில் பலவிதமான வாதங்கள் எழும். ரமணர் அவற்றை ஒருபோதும் ஆதரித்தது இல்லை. ஏனெனில் அவையெல்லாம்

வெறும் அறிவின் எல்லையில் எழுபவை. ஒரு சமயம் ரமணர் கூறினார், “விருத்தி பிரபாகரம் என்ற நூலின் ஆசிரியர் அந்த நூலை எழுதுவதற்கு முன்னர் தாம் மூன்றரை லட்சம் நூல்கள் படித்ததாக கூறுகிறார். என்ன பயன்? அவை ஆன்ம அனுபவத்தை தருமா? விசார சாகரம் தர்க்கத்தையும் கலைச்சொற்களேயும் அதிகமாகக் கொண்டது. இந்த பெரிய நூல்களெல்லாம் நம்மை உணர உதவுமா? சாதகர்கள் தங்கள் இறந்தக் காலத்தைக் குறித்து நினைக்கும் பொழுதும் கவனம் திசைதிரும்பும். அதை தெரிந்து கொள்வதால் அந்த அடிப்படையில் எதிர்காலத்தை அறியமுடியுமா? என நினைக்கத் தோன்றும். எதிர்காலத்தைப் பற்றி நினைப்பதும், இறந்தகால குப்பைகளேக் கிளறுவதும் பயனற்றச் செயல் என்பதை அவர்கள் அறிவதில்லை. நிகழ்காலத்திலிருந்து கவனத்தைத் திசைத் திருப்பும் எண்ணமே இது. பால் பிரண்டன் புத்தகத்தில் (இமயத்தில் ஒரு முனிவர்) இறந்தகால பிறப்புகளே அறிந்து கூறும் முனிவர்களேப் பற்றிய செய்தி காணப்படுவதாக ஒருவர் குறிப்பிட்டபோது, ‘இறந்தகாலச் சுமை நிகழ்காலத் துன்பத்திற்கு ஏதுவாகும்’, என்றார் ரமணர். ஏனெனில் நினைவுகளே வாசனைகளாகி மனத்தை அலைக்கழிக்கின்றன. வாசனைகளே வேரறுப்பதே ஆத்ம விசாரத்தின் நோக்கம். விநோதமாக அப்பாதையை விட ஆன்மீகப் பாதையின் குறுக்கே உள்ள சிறு சந்துகள் நம்மை அதிகம் கவர்கின்றன. ஆத்ம விசாரம் என்பது ராஜபாதை அல்லவா?

நோக்கம் இல்லாத எண்ணங்களின் ஆதிக்கத்தை குறித்தே நாம் சிந்திக்கிறோம். எண்ணங்களே நாம்

கட்டுப்படுத்தாதவரை மனம் பயனற்ற எண்ணங்களில் அலைந்து கொண்டிருக்கும். அவை பயனற்றவை, ஏனெனில் அவை மனத்தை ஒருமுகப்படுத்தும் ஆற்றல் அற்றவை. அன்மீக வழியில் முன்னேற வேண்டுமானால் தேவையற்றவற்றை நீக்குவதைக் காட்டிலும் வேறுவழியில்லை. எனவே வெளிப்பொருள்களைப் பற்றிய எண்ணங்களிலிருந்து நம்மை நாம் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். தொடக்கத்தில், மற்ற எண்ணங்களையெல்லாம் நீக்கி கவனத்தை 'நான்' எண்ணத்திற்கு கொண்டு வருவது என்பது கடினமாக இருக்கும். இவ்விடத்தில் தம் உதவியாளர் ரங்கசாமியிடம் ரமணர் கூறிய உவமையை எடுத்துக்காட்டுவது பொருத்தமாக இருக்கும். ரமணரின் இருக்கைக்கு மேலே அணில் கூடு ஒன்று இருந்தது. அணில் குஞ்சுகளின் தாயான அணிலை ஒரு பூனைதின்றுவிட்டது. எனவே அவற்றைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு ரமணருக்கு ஏற்பட்டது. அப்போது அவர் கூறினார், "கூட்டில் தங்கியிருப்பதுதான் சிறந்தது என்பது இந்தக் குஞ்சுகளுக்குத் தெரிவதில்லை. எல்லாத் தொல்லைகளுமே வெளியில் தான் இருக்கின்றன. இருப்பினும் அவற்றால் உள்ளே தங்கியிருக்க முடிவதில்லை. இது போலவே மனம் வெளிக்கிளம்பாமல் இதயத்தில் மூழ்கியிருக்கு மானால் சந்தோஷமே இருக்கும்." மனத்தை எப்படி இதயத்தில் இருத்துவது என்று ரங்கசாமி கேட்டபோது ரமணர் பதில் கூறினார்." நான் இப்பொழுது செய்துகொண்டிருக்கிறேனே அப்படித்தான். ஒவ்வொரு முறையும் அணில் குஞ்சு வெளியே வரும்போது அதை மறுபடியும் நான்

எடுத்துக் கூட்டுக்குள் வைக்கிறேன். கூட்டுக்குள் இருப்பது தான் உண்மையான மகிழ்ச்சி என்று அது உணரும் வரை நான் அவ்வாறு செய்து கொண்டேயிருக்கிறேன். 'நான்' மீது அதிக கவனம் செலுத்தத் தொடங்குவதை பழிகிக்கொள்ளும்போது மற்ற எண்ணங்களைப் பற்றி கவலையில்லை. விசாரத்தால் வலிமையடையும் மனம் உடனே உள் நோக்கித் திரும்பும். பின் மற்றவர்களைப் பற்றிய கேள்வி, வெறும் பேச்சு ஆகியவை பழுத்தப் பழம் மரத்திலிருந்து உதிர்வதைப் போல் நீங்கிவிடும். தியானம் என்பது தூய மகிழ்ச்சியைத்தரும். பின்னர் தியானத்திற்கான நேரம் என்பது முதலில் மெதுவாகத் தொடங்கி, போகப்போக துரித கதியில் செல்லும். இறுதியில் நம் நேரம் முழுவதுமே தியானத்திற்கு உரியதாக அமையும்.

* * * *

# தியானிப்பவன் யார்?

பக்தர்: எதைக் குறித்து நாம் தியானிப்பது?

பகவான்: தியானிப்பவன் யார்? முதலில் அந்தக் கேள்வியைக் கேளுங்கள். தியானிப் பவனுகவே இருங்கள். தியானிப்பதற்கு தேவையேயில்லை.

டாக்ஸ் 205 ப. 174

தியானம் என்பது பலவாறாக அமைகிறது. தியான வகுப்புகளுக்கு, தியான பயிற்சிகளுக்கு நிறைய கூட்டம் கூடுவதைப் பார்த்தால் அன்றாடத் துன்பத்திலிருந்து தியானத்தில் விடுதலே கிடைக்கின்றது என்பது தெரிகின்றது. பொதுவாக தியானம் என்பது ஒரு புனித வடிவத்தையோ, பெயரையோ, ஒலியையோ அல்லது இவை மூன்றையும் சேர்த்தோ நினேப்பதைக் குறிக்கும். ஒரே எண்ண ஓட்டம் மன அமைதியைக் கொடுத்து ஆன்மீக பாதையில் முன்னேற்றத்தைத் தந்து, இறுதியில் விணக்கட்டிலிருந்து விடுதலேயைத் தரும் என்பது நம்பிக்கை.

தியானம் என்பது மனத்தைப் பொறுத்தது, தியானிப்பவனேயும் அவனுடைய எண்ணங்களேயும் பொறுத்தது. ஆன்மீக பாதையில் செல்பவர்கள் தங்கள் தியானப் பயிற்சியில் கண்ணும் கருத்துமாகவே இருக்கிறார்கள். இருப்பினும் தியானத்தின் பலன்கள் எளிமையாகக் கிடைப் பதில்லை. அதற்குக் காரணம் வைராக்கியமும் ஆழ்ந்த மன அமைதியும் இல்லாமையே. ஆன்மீக முயற்சியில் தோல்வி ஏன் நேரிடுகிறது என்பதை நாம் பரிசோதிக்க வேண்டும்.

மனத்தின் இயல்பை புரிந்து கொள்ளாததே நம் தோல்விக்குக் காரணம் என்பார் ரமணர். தம் அனுபவத்தை ஒட்டி ரமணர் சொன்ன சில குறிப்புகளை நாம், இயல்பான தியான நிலையை அனுபவிக்கப் பயன்படுத்த வேண்டும். இந்த நிலையில் தியானம் மட்டுமே உண்டு. முழுமையான அமைதியும் ஆனந்தமும் நிரம்பிக் கிடக்கும். தியானம் செய்யும் தனி வியக்தி இந்நிலையில் இல்லை. இந்நிலைக்கு வந்து விட்டால் அது நிலைத்து நின்றால் போதும். தியானம் என்பதே தேவையில்லை. ஆம், தியானிப்பவன் எங்கிருக்கிறான்? அந்நிலைக்கு எவ்வாறு வருவது?

எல்லாவிதமான தியானப் பயிற்சிகளிலும் தியானிப்பதற்கு புனிதமான ஒரு பொருள் உண்டு. எனவேதான் எதைக் குறித்து தியானிப்பது என்று பக்தர்கள் கேள்வி கேட்கிறார்கள். ரமணர் பதில் சொல்லும் போது அவர்கள் கவனத்தைத் தியானிக்கப்படும் பொருளிலிருந்து நேராகவே தியானிப்பவனுக்கு மாற்றி விடுகிறார். அதற்கான காரணத்தை அவர் பலவழிகளில் விளக்கியும் இருக்கிறார். எல்லா எண்ணங்களும், 'நாம் செய்கிறோம் என்ற எண்ணத்தில் சூட்சுமமாக கிடக்கின்றன. எண்ணக் குவியல்களில் ஒரு குறிப்பிட்டக் காலத்தில் சிலவே மேலே வருகின்றன. நனவுக் காலத்தில் பொருள்களோடு நாம் கொள்ளும் உறவைப் பொருத்தது அச்செயல். முதலில் எழும் எண்ணம் நான் என்ற எண்ணமே. அதன் பின்னரே மற்ற எண்ணங்கள் எழுகின்றன. நான் என்ற எண்ணத்தின் மீது நாம் செலுத்தும் கவனத்திலேயே மற்ற எண்ணங்கள் தோன்றுகின்றன. அதன் விளைவாக எண்ணக்குவியல்கள் பல தோன்றி

விடுகின்றன. வெளி உலகோடு உறவு கொள்ளும் போது அவை மாறிக் கொண்டேயிருக்கின்றன. எண்ணங்கள் மாறிக் கொண்டேயிருந்தாலும் அவற்றை எண்ணுபவன் எல்லா நேரங்களிலும் ஒருவன் தானே! அவன் மாறுவதில்லையே. எல்லா நேரங்களிலும் அவன் தொடர்ந்து இருந்து கொண்டிருக்கிறான். மனத்தை உற்று நோக்கினால் அதன் ஒருபகுதியாகிய 'நான்' என்பது மாறாது இருக்கும் என்பதும், மற்ற எண்ணங்கள் வருவதும் போவதுமாக இருக்கும் என்பதும் தெரிகிறது. வெளிக் கிளம்பாத எண்ணங்களும் உண்டு, ஏனெனில், அவற்றிற்கான சூழ்நிலை இன்னும் தோன்றாமலேயே இருக்கலாம். மாறிக் கொண்டிருக்கும் மற்ற எண்ணங்களுக்கு அவற்றின் அடிப்படையிலிருக்கும் நான் என்ற எண்ணத்திற்கும் இடையே உள்ள அடிப்படை வேறுபாட்டை ரமணர் கவனத்தோடு விளக்குவர்.

ஒரு முக்கியமான கருத்து, நான் என்பதற்கு தரும் கவனம் மற்ற எண்ணங்களுக்குத் தராது போனால் அவை இறந்து போகும். எண்ணங்கள் மனத்தின் எல்லையில் இருப்பதில்லை எனவேதான் மனம் பலவாறாக அமைகிறது. விளக்கிச் சொன்னால் தூங்கி விழிக்கும் போது அன்றைய வேலைக்குரிய எண்ணங்களுக்கே கவனம் தருகிறோம். அவை பலவிதமான எண்ணங்களை உருவாக்கும். நாம் அவற்றை கவனிக்காத போது அவை பின்னோக்கித் தள்ளப்படும்; மறுபடியும் நம் கவனத்திற்காக காத்திருக்கும்.

பகுத்து ஆயும்போது மனத்தின் இயல்பு என்பது 'நான்' எண்ணத்தையேப் பொறுத்தது. மற்ற

எண்ணங்களெல்லாம் அதனையே சார்ந்திருக் கின்றன எனவே அவற்றை நாம் ஒதுக்கி விடலாம்.

'நான்' என்ற எண்ணம் ஏன் இவ்வளவு முக்கியமானது என்று கேட்கலாம். தூய உணர்வின் பிரதிபலிப்பே அந்த எண்ணம். அதிலிருந்தே அந்த எண்ணம் தோன்றுகிறது. அதை கவனிக்கும் போதே அந்த எண்ணம் ஒளிவிடும். கவனத்தை முழுமையின் மீது அதுவே அழைத்துச் செல்லும். ஏனெனில், முழுமை உணர்விலிருந்து தோன்றுவதுதானே அந்த எண்ணம். ஆகவே 'நான்' எண்ணத்தைக் கவனிக்கும் போது மற்ற எண்ணங்களின் மீது செலுத்தும் கவனம் முடிந்து விடுகிறது. ஆகவே தியானிப்பவன் யார்? என்று விசாரித்து தியானிப்பவனுகவே இருக்கச் சொல்கிறார் ரமணர். தியானிப்பவன் யார் என்று விசாரிப்பது 'நான்' யார் என்ற விசாரத்தின் இன்னொரு வடிவம். கேட்கப்பட வேண்டிய மிக முக்கியமான கேள்வி அதுவே. தியானிப் பவனிடமிருந்து கவனம் விலகி தியானப் பொருள் மீது செல்லும் போதே மற்ற கேள்விகளுக்குரிய தேவை உண்டாகிறது.

தன்னை நோக்கி கவனம் செலுத்துவது மிகவும் கடினமான ஒன்று; ஏனெனனில், தியானிப்பதற்கு ஸ்தூலமான எதுவும் இல்லை என்று ரமணரிடம் சில பக்தர்கள் முறையிடுவது உண்டு. உருவங்களோடு நமக்குள்ள அழமான பிடிப்பே தியானிப்பதற்கு உருவத்தை கட்டாயப் படுத்துகின்றது, எனவேதான் இந்தப் பிரச்சினை எழுகிறது என்பார் ரமணர். உண்மையில் தியானிப்பவனை விசாரித்து அறிவது மிக

எளிமையான ஒன்று. பழக்கமின்மையும், அனுபவமின்மையுமே நம்மை மாறாக நினைக்கச் சொல்கிறது. இருப்பினும். இடைவிடாத தொடர்ந்த முயற்சியால் கவனத்தை தியானிப்பவன் மீது செலுத்தினால், உள் திரும்பிய மனம் ஆனந்தத்தை அனுபவித்து, அதன் உள்முகப் பயணம் மேலும் தொடரும். இதனால் இந்நிலையில் ஏற்படும் தூக்கத்தை விலக்கி எண்ணங்களில் தோயாமல் மனம் தனது மூலத்தில் தோய்கிறது.

* * * *

# முக்தி இருக்கட்டும். நீங்கள் யார்?

மகரிஷி: இங்கு வந்து சிலர் தங்களைப் பற்றி விசாரிப் பதில்லை. ஜீவன் முக்தரான இந்த மகரிஷி உலகத்தைப் பார்க்கிறாரா? அவர் கர்மத்தால் பாதிக்கப் படுகிறாரா? உடல் நீங்கிய பின்னர் முக்தி என்பது யாது? உடல் இருக்கும் போதே முக்தி கிட்டுமா அல்லது அது நீங்கிய பின்னர் தான் முக்தி கிட்டுமா? முனிவரின் உடல் ஒளியில் கரையுமா அல்லது வேறு விதமாக மறையுமா? உடல் பிணமானப் பின்னரும் முனிவருக்கு முக்தி கிடைக்குமா? இவ்வாறெல்லாம் கேள்வி கேட்கிறார்கள்.

எனவே நான் அவர்களிடம் சொல்லுகிறேன், "முக்தி கிடக்கட்டும் அதை விட்டு விடுங்கள். பந்தம் என்பது இருக்கிறதா? இதை அறியுங்கள் நீங்கள் உங்களை அறிவது முதலாவதும் முக்கியமானதும் ஆகும்."

– டாக்ஸ் 578 ப. 534.

விசாரத்தைப் பற்றியும், மனத்தை அடக்குவதுப் பற்றியும், மனத்தை தூய்மைப் படுத்துவது பற்றியும் மற்றும் ஆன்மீக நெறி பற்றியும் கேள்வி கேட்கும் சாதகர்களிடம் மகரிஷி மிகவும் பொறுமையாக இருப்பார். இருப்பினும் பயிற்சிக்கு உதவாத வெறும் கேள்விகளை அவர் ஆதரிப்பதில்லை. ஒரு சமயம் நன்கு படித்த ஒருவர் பகவானிடம் வந்து "உலகத்தின் மூலமும் காரணமும் எது?" என்று கேட்டார்.

"உங்களுக்கு வேறு கவலைகளே இல்லையா?" என்று உடனேயே பதில் வந்தது. தத்துவத்தைப் பற்றி எழும் பல நூல்கள் நமக்கு உதவி செய்வதில்லை. மேற் சொன்ன பகவான் உரையில் முக்தி நிலை பற்றி எழும் வழக்கமான சில கேள்விகளை நாம் காண முடிகிறது. முக்தி என்பது உடல் நீங்கிய பின்னர் தான் சாத்தியம் ஆகும் என்று சிலர் கூறுகிறார்கள், முக்தி அடைந்தவனின் உடல் கர்மத்தால் பந்தப் பட்டவனின் உடலைப் போலவே கஷ்டப்படும் என்று கூறப்படுகிறது. இங்கு துன்பம் என்பது பார்ப்பவர் கண்ணுக்குத் தானே ஒழிய ஞானிக்கு இல்லை. மேலும் முக்தி நிலை உடலோடு சேர்ந்தது, உடல் இல்லாதது, உடலோடு சேர்ந்ததும் இல்லாததும் ஆகும் என மூவகையாகப் பிரிக்கப்படுகிறது. சில ஞானிகள் உடலோடு மறைகிறார்கள், சிலர் ஒளியில் கலக்கிறார்கள் சிலர் தாமாகவே சமாதியில் நுழைகிறார்கள், சிலர் உடம்பைச் சாதாரணமாக விடுகிறார்கள்.

அறிஞர்கள் இந்த வேற்றுமைகளைப் பற்றி எல்லாம் பேசட்டுமே. அவை பற்றி ஆத்ம சாதகன் கவலைப்பட வேண்டாம். கர்மத்தால் விளைந்த காலத்தை புத்தி வாதங்களில் வீணடிக்க வேண்டாம். கோட்பாடுகள் எல்லையற்றவை என்கிறார் ரமணர். ஆனால் வாழ்க்கையோ எல்லைக்குட்பட்டது. எனவே 'கட்டுப்பட்டு இருக்கிறோம்' என்ற எண்ணம் உடைய நாம் விடுதலைப் பெற முயற்சிக்க வேண்டும். எல்லா புதிர்களுக்கும் ஆன்ம ஞானமே பதில் தரும். நம்மைப் பற்றி நாம் அறிவது தான் ஞானம். எல்லா கோட்பாடுகளுமே கேள்வி கேட்கும் நம்மைச் சுற்றி தானே எழுகின்றன.

அடிப்படைகளைப் பின்பற்றாத வரையில் நாம் தொல்லையிலிருந்து மீளமுடியாது. ரமணரிடம் முக்தி பற்றி கேட்கப்படும் சில கேள்விகளில் இதனைக் காணலாம். ஒருவர், 'உன்னை விடுவித்துக்கொள்', என்ற குறிக்கோளைத் தாம் வைத்துக் கொள்ளலாமா என்று கேட்டால் மற்றொருவர், சம்சாரத்தை உண்டு பண்ணும் மனைவியையும் குழந்தைகளையும் துறந்து விடலாமா என்று கேட்டார். மனத்தின் வெளிக்கிளம்பும் ஈர்ப்புகளால், முக்தி என்பது உண்மையிலேயே சாத்தியம் தானா என்பது இன்னொருவர் கேள்வி. வேறொருவர், தமக்கு முக்தி வேண்டாம் என்றும் மகிழ்ச்சி மட்டுமே போதும் என்றும் கூறினார்; பாவம், முக்தி அடைந்தவன் எப்பொழுதும் ஆனந்தத்தில் முழ்குகிறான் என்பது அவருக்குத் தெரியாது. இவர்களுக்கெல்லாம், தம்மைப் பற்றிய உண்மையை விசாரித்து அறிய வேண்டும் என்று ரமணர் கவனப்படுத்துவார். ஆன்மீக வழியில் முன்னேற கருத்துலகை விட்டு அனுபவ உலகிற்குச் செல்ல வேண்டும்.

தேவையானது அனுபவம் மட்டுமே. ஆகவே பயிற்சிகள் எல்லாம் அதனை நோக்கியே செலுத்தப்பட வேண்டும். உண்மையை வெளிப்படுத்தும் அந்நிலையை எவ்வாறு அடைவது? எண்ணங்களை விட்டுவிடுவது என்பது. பொதுவாக விளையும் ஒரு தவறு எண்ணங்களை விலக்குவது என்பது எதிர் மறையானது. விளைவு அதற்கு நேர் மாறாக அமைவதும் உண்டு. மருத்துவர் ஒருவர் ஒரு நோயாளிக்கு மருந்தினை விதித்ததுப் பற்றி ரமணர் எடுத்துக் காட்டுகிறார். மருந்து சாப்பிடும் போது குரங்கைப் பற்றி நினைக்க வேண்டாம் என்றார் அந்த

மருத்துவர். அந்த நோயாளி மருந்து சாப்பிட முடியுமா என்று கேட்கிறார் ரமணர். குரங்கைப் பற்றி நினைக்கக் கூடாது என்று எண்ணும் போதெல்லாம் அவர் அதனை நினைக்க மாட்டாரா?

எனவே தான் 'நான்' என்பதன் அடிப்பபடையில் இருக்கும் உணர்வை கவனிக்குமாறு, நேரிடையான ஓர் அணுகு முறையை ரமணர் வலியுறுத்துகிறார். எல்லா எண்ணங்களுமே, 'நான்' என்ற எண்ணத்தோடு தான் தொடங்குகின்றன. முதல் எண்ணத்திற்குத் தரப்படும் கவனம், 'நான் இருக்கிறேன்', என்பதைக் கவனிக்கச் செய்து மனத்தை வலிமைப் படுத்துகிறது. தொடக்கத்தில் இடை மறிக்கும் மற்ற எண்ணங்களிலிருந்து விலகி நிற்கும் கவனமான நிலை படிப்படியாக அடிப்படை உணர்வு குறித்துக் கொள்ளும் விழிப்புணர்வாக மாறுகிறது. பயிற்சியினால் கேள்வி கேட்பவர் உள்நோக்கி தள்ளப்பட்டு, உணர்வின் முழுமையால் விழுங்கப் படுகிறார். அதனால் புத்துணர்ச்சிப் பெற்று, மனத்தின் எதிர் இழுப்பால் வெளிக் கிளம்பினாலும் அதுபற்றி கவலைப் படுவதில்லை. மறுபடியும் மறுபடியும் உள்நோக்கிச் செல்லும்படி அனுபவம் தூண்டுகிறது அனுபவிக்கப்பட்ட உண்மையை மறுக்கவோ, மறக்கவோ முடியாது. என்றும் உள்ளது எதுவோ அது நிலையான வலிமையைத் தரும். அநத அனுபவம் படிப்படியாக நிலைத்து நிற்கும். பின்னர் ஒருவர் எப்பொழுதும் விடுதலைப்பட்டே இருக்கிறார் அவர் ஒருபோதும் கட்டுப்படுவதில்லை என்ற உண்மை உதயமாகிறது.

* * * *

# மனத்தின் ஆற்றல்

பக்தர்: நான் பக்திக்காக பக்தியை விரும்புகிறேன். இந்த விருப்பம் அதிகமாக எனக்கு வேண்டும். சாட்சாத்காரம் கூட எனக்குத் தேவையில்லை. என்னுடைய விருப்பத்தில் நான் வலிமையோடு இருக்க வேண்டும்.

மகரிஷி: விருப்பம் இருந்தால், நீங்கள் விரும்பாது போனாலும் சாட்சாத்காரம் உங்களுக்குக் கட்டாயம் கிடைத்தே தீரும். சாட்சாத்காரத்திற்குரிய வாயில்படி சுபேச்சையேயாகும்.

- டாக்ஸ் 275 ப. 219.

இங்கு மனத்தின் சக்தியைப் பற்றி ரமணரது நிச்சயமான கூற்றை நாம் காண்கிறோம். எண்ணங்களின் ஆற்றல் என்பது ஆன்ம சக்தியின் பிரதிபலிப்பே ஆகும். உணர்வின் ஒளி எண்ணுபவர் மீது விழ, எண்ணங்கள் தங்கள் வலிமையை அதனிடமிருந்தே பெறுகின்றன. மனம் சிதறாது பலவீனமடையாமல் இருக்கும் போது மிகவும் சக்தி வாய்ந்த கருவியாகிறது. அத்தகைய மனத்திற்குத் தடை எதுவுமேயில்லை. ஆர்வம் மிக்க ஆசையின் வலிமை பற்றி மேஜர் சாட்விக் எழுதுகிறார். திலிப்குமார் ராய்க்கு எழுதிய கடிதத்தில் அவர் பின்வருமாறு கூறுகிறார்: ஆத்ம சாட்சாத்காரத்தைப் போதுமான அளவு விரும்பினால் தாம் அந்த இலக்கை எய்துகின்ற வரையில் இறக்கக் கூட மாட்டோம் என்று ஒரு ஞானி தம் நண்பரிடம் கூறுவாராம். மனம் அவ்வளவு வலிமை படைத்தது.

எனவே மனத்தின் வலிமையை தார்மீக வழியில் செலுத்தினால் அதுவே முக்தியைத் தரும். ரமணர் கூறுவது போல அது சுபஇச்சையாக (மங்கள விருப்பமாக) இருக்கவேண்டும். மனம் ஒருவரைச் சம்சார பந்தத்தில் தள்ளவும் தள்ளும் அல்லது அவற்றை வேரறுக்கும். பந்தம், முக்தி ஆகியவை மனத்தில் தோன்றும் எண்ணங்களே.

மனமற்ற நிலையின் மீது நம் கவனம் பதியும் போது நமக்குரிய ஆயுதம் மனமே. மனத்தை மனத்தின் மூலம் கொல்லுவது என்பது அதை தூய்மை செய்வதால் மட்டுமே சாத்தியமாகும். படிப்படியாக சத்துவ குணம் அதிகமாகும் போது, தியானத்தின் மூலம் வாசனைகள் அழிவதால் கடவுளுக்கே அர்ப்பணிக்கப்பட்ட தொண்டினாலும், ஆத்ம விசாரத்தினாலும் உள்முகப் பயணம் மிகவும் எளிமையாகிறது. மூலத்திலிருந்து விலகியிருத்தல் படிப்படியாக குறைகிறது; மனத்தின் வெளிக் கிளம்பும் பாங்கு குறைகிறது.

ஆகவே ஞான வழியில் செல்லவேண்டும் என்ற விருப்பத்தின் முக்கியத்துவத்தை நாம் எளிதில் காண முடிகிறது. இந்த ஆர்வத்திற்குரிய காரணிகளை நாம் நோக்க வேண்டும். நாம் இலக்கை அடைய மாட்டோம் அல்லது மிக விரைவில் அடைந்து விடுவோம் என்ற பயம் எப்போதுமேயிருக்கிறது. 'நம்முடைய முயற்சிகள் வெற்றியடையுமா'? என்றுதான் சந்தேகம். நடனானந்தர் முதல் பலருக்கு இதனை உறுதிப்படுத்தி இருக்கிறார் ரமணர். நம்முடைய மனங்கள் ஒரு காரியத்தின் விளைவை எதிர் நோக்கியிருப்பதாலேயே இந்த பயம்

உண்டாகிறது. 'சாட்சாத்காரம் என்பது நம் இயல்பு, அதில் சந்தேகமேயில்லை', என்பதே ரமணரது பதிலாகப் பெரும்பாலும் அமைகிறது.

நாம் எப்போழுதுமே நம்மை உணர்ந்திருக்கிறோம், அதனை மறைத்திருக்கும் காரணிகளை அகற்ற வேண்டும். என்று அவர் கூறுவார். எனவே விளைவைப் பற்றி நாம் நம்பிக்கையோடு இருக்கலாம், நம் பயிற்சியில் உறுதியாகயிருந்தால். ஏன் இந்த நிலை? பயிற்சி மட்டுமே மனத்தை வலிமையாக்கி நம்மைப் பற்றி அறிய உதவும் விருப்பத்திற்குத் தண்ணீர் ஊற்றும்.

பயிற்சியின் போது என்ன ஆகிறது என்று பார்ப்போம். ஆரம்பத்தில் இருக்கும் ஆர்வம் குறைகிறது. அப்பளப் பாட்டில் ரமணர் குறிப்பிடும் சந்தோஷ சாதனைக்குப் பதிலாக மந்தமான ஓர் நிலை உருவாகிறது. இதை எதிர்த்துப் போராட மந்திர ஜபமோ, உருவத் தியானமோ, விசாரமோ துணை செய்யும். எதற்காக வலிமைத் தேவை? வாசனைகளை அகற்றி மனத்தை ஒருமுகப் படுத்தவே. எனவே நாம் மந்திரத்திடமோ அல்லது கடவுளிடமோ நம்மை ஒப்படைத்து அருளுக்காகக் காத்திருக்க வேண்டும். சாந்தம்மா குறிப்பிடும் கும்பகோண பக்தர்களைப் போல் இருக்க வேண்டிய அவசிய மில்லை. அந்த பக்தர்களுக்கு ரயில் வண்டியைப் பிடிக்க வேண்டிய அவசரம். அதற்குள் ரமணர் அவர்களுக்கு அருள் புரிய வேண்டுமாம். அவ்வளவு விரைவாக ஆன்ம சாதனையின் விளைவுகளை அவர்கள் விரும்பினர். அவர்கள் ரமணரை அவசரப்படுத்தினர். எனவே தான் பொறுமையின் தேவை குறித்து ரமணர்

வலியுறுத்துகிறார். ஏனெனில் ஆத்ம சாதனை எப்போது பலன் அளிக்கும் என்று கூற முடியாது.

வாழ்க்கையின் சாதாரண விஷயங்களில் கூட நாம் காலத்தை உணர்கிறோம். உதாரணமாக கருவுற்ற ஒன்பதாவது மாதத்தில் குழந்தைப் பிறக்கிறது. ஒரு குறிப்பிட்ட காலம் கழித்து செடிகளில் பூ பூக்கிறது. சில ஆண்டுகள் கழித்து மரங்களில் பழம் பழுக்கிறது. ஆனால் ஆத்ம சாதனையின் போது மட்டும் பொறுமையின்மைக் காணப்படுகிறது. சிலர் தயாராவதற்கு முன்னரே இருமடங்கு முயற்சி செய்கிறார்கள். விளைவாக நீண்ட நேர தியானத்தின் போது உண்டாகும் தலைவலி, உடல்வலி ஆகியவைப் பற்றி அவர்கள் ரமணரிடம் முறையிடுகிறார்கள். இவை உண்மையில் அபாய அறிவிப்புகள். இதனால் பாசமே தேவையில்லை என்பது இல்லை, எல்லா வற்றையும் ஒரே நிலையில் பார்க்க வேண்டும் என்பதே கருத்து. புலியின் வாயிலிருந்து அதன் இரை தப்பவும் முடியாது. சத்குருவின் காப்பாற்றும் முயற்சிகள் தோல்வியடையா.

சத்குருவின் ஸ்தூலமான சன்னிதியில் மட்டுமே ஆத்ம சாதனை சாத்தியமாகும் என்பது மற்றொரு பயம். ரமணாஸ்ரமத்திலிருந்து வெளியே இருக்கும் போது இது பற்றி கிராண்ட் டஃப் முறையிடுவார். மகரிஷியின் சன்னிதியிலிருந்து மிகத் தொலையில் இருக்கும் தம்முடைய வீட்டில் ஆத்ம சாதனை செய்ய முடியுமா என்று பயத்தோடு ஓர் ஆங்கில பக்தர் கேட்டார். அது போன்ற எண்ணங்கள் வெளிப்படும் போது தாம் இதயத்தில் இருப்பதாக அவர்களுக்கு

நினைவு படுத்துவார் ரமணர். காலத்தையும் இடத்தையும் கடந்து, அனந்தமான இயல்புடைய குருவை எந்தச் சூழ்நிலையிலும் நாம் நினைத்தால் அவருடைய இருப்பை அங்கே உணரலாம். ஆகவே இலக்கை அடைய வேண்டும் என்ற ஆவல் சுடர்விட்டு எரியும். பின்னர் மகிழ்ச்சிகரமான அகப் பயணத்திலிருந்து நம்மை யார் தடுத்து நிறுத்த முடியும். அப்பொழுது விளையும் ஆனந்தத்தை யார் மறுக்க முடியும்? அத்தகைய ஆனந்தத்தின் ருசி, மேலும் மேலும் அனுபவத்தைப் பெறத்தூண்டும். இறுதியில் வாழ்வின் முழுமையான ஆனந்தம் பூரணமாய்ப் பொங்கித் ததும்பும்.

* * * *

## இதுவா உங்கள் வேலை?

இஷ்ட தேவதை, குரு ஆகியவை மிகவும் சக்தி வாய்ந்த உதவிக் கரணங்கள். ஆனால் அவற்றை நன்கு பயன்படுத்த நம் முயற்சியும் தேவை. சூரியனைப் பார்க்க வேண்டியது நாம் தான். கண்ணாடியும் சூரியனும் நமக்காகப் பார்க்குமா? நம் உண்மை இயல்பை நாம்தான் அறிய வேண்டும்.

*- டாக்ஸ் - 28 ப. 30*

ஆன்மீக வாழ்க்கை என்பது அருளும் முயற்சியும் கலந்தது. ஆன்மீக முயற்சி வெற்றி பெற அவற்றின் பங்கு என்ன? முயற்சி, விழிப்பான இடைவிடா முயற்சி என்று மகரிஷி ஒவ்வொரு முறையும் கூறுகிறார். இதற்கான காரணம் இதுதான். நாம் ஏற்கனவே அருளில் கழுத்தளவு ஆழத்தில் மூழ்கி இருக்கிறோம். ஆன்மீக சாதகனுக்கு சத்குருவின் அருள் நிலையாக உண்டு. கேளாமலேயே தரப்படுவதால் அதைக் கேட்க வேண்டிய அவசியமில்லை. இருப்பினும் பக்தர்கள் ரமணரிடம் அருளுக்காகத் தொல்லை செய்து உறுதி பெறுவதும் உண்டு. இது புரிந்துக் கொள்ளக் கூடியது, ஏனெனில் அருளின் வேலைப்பாடு புரிந்து கொள்ள முடியாது ஒன்று. ரமணரின் அருகிலேயே இருந்தும் ஏன் வெளிப்படையான மாற்றம் தமக்குள் நிகழவில்லை என்று சாட்விக் ஒருமுறைக் கேட்டார். நிச்சயமாக மாற்றம் இருப்பினும், அளக்க முடியாததால் அது உணரப்படவில்லை என்றார் ரமணர். நம் முயற்சிக்குத் துணையாக குரு அருள் எப்பொழுதும் கூடவேயிருக்கும். அது சிலசமயங்களில் உண்டு, பிற சமயங்களில் இல்லை என்றப் பேச்சுக்கே

இடமில்லை. ஏனெனில் அது சத்குருவால் நம்மிடம் செலுத்தப்படுகிறது. மேலும் அவருடைய இயல்பே அருள்தான். ஆகவே ஒருவகையில் சொல்லப் போனால் ஒவ்வொரு சூழ்நிலையிலும் ரமணருடைய அருள் இடைவிடாது நம்மைக் காத்து வழி நடத்துகிறது என்று உறுதியாகச் சொல்லலாம்.

சத்குருவோடு தொடர்புடையவர்களுக்கு அருள் நிறைய அளவில் கிடைக்கிறது. எனவே உண்மையைத் தேடத் தேவையானது முயற்சியே. முயற்சியினால் தியானத்தால் விசாரத்தால் மட்டுமே அருளின் ஓட்டத்தைப் பற்றிய விழிப்புணர்வு உண்டாகும். எனவேதான் முயற்சி செய்பவர்களுக்கு அருளின் துணை நிச்சயமாக எப்போதும் உண்டு என்று ரமணர் கூறுகிறார். அவர்களிடம் அருள் செயல்படுகிறது.

விசாரம் இல்லாது போனால் அருள் செயலற்று நிற்கிறது. ரமண வழியின் முயற்சிக்கு, சாதனைக்கு மிகவும் முக்கியத்துவம் அளிக்கப் படுகிறது, ஏனெனில் இயல்பான ஆனந்த நிலை அனுபவிக்கப்பட்டு அதில் நாம் தொடர்ந்து நிற்க வேண்டும். அந்த அனுபவம் கடுமையான பயிற்சியால் தான் வரவேண்டும். கடவுள் தாயைவிட கருணையோடு இருந்தாலும் அனுபவத்தை நம் வாயில் ஊட்டமாட்டார். ஏன்? முழுதும் சரணடைந்த வர்களையே சத்குரு ஏற்றுக் கொள்கிறார். நாம் செய்கிறோம் என்ற எண்ணம் இருக்கின்ற வரையில் உண்மையை நாம் தான் உணரவேண்டும். உண்மையில் நாம் ஏதாவது தொழிலில் ஈடுபட்டுக் கொண்டே இருக்கிறோம், அமைதியாக இருப்பதில்லை. எனவே தான் நம்முடைய நோக்கம்

நமது இயல்பான நிலையை கண்டு பிடிப்பதில் அமைய வேண்டும் என்கிறார் ரமணர்.

முயற்சியே மிக முக்கியம் என்பதால், தடையாக நிற்கும் எதிர்மறை எண்ணங்களை ரமணர் மெதுவாக விலக்குவார். முதலாவதாக நாம் சமாளிக்க வேண்டியது பய உணர்ச்சியே. அந்த போலி உணர்ச்சியை அகற்ற வேண்டும் என்று வலியுறுத்துவார் ரமணர். சிறிது நேரம் தியானித்தாலும் வாழ்க்கை என்பது மிக எளிமையாக ஆகும் என்பார் அவர். அமைதி குடிகொண்டால் வேலை செய்யும் சூழ்நிலையே மாறிவிடும். தியானம் செய்யச்செய்ய இது நிதர்சனமாகப் புலப்படும்.

ஆன்மீக வாழ்க்கை என்பது மிகக் கடினமானது. எனவே அதைத் தொடங்க வேண்டாம் என்ற எண்ணம் இரண்டாவது தடைக் கல்லாக அமைகிறது. இங்கும் ரமணர் இதுபோன்ற எண்ணங்களை விலக்கச் சொல்வதைக் காணலாம். காமத்தையும் கோபத்தையும் விட வேண்டுமா என்று ஒருவர் கேட்டபோது ரமணர் நகைச்சுவையோடு பதில் சொன்னார், "எண்ணங்களை விட்டு விடுங்கள் வேறு எதனையும் விடவேண்டாம்". ரமணர் வழியில் பழக்கங்களையும் எண்ணங்களையும் ஒன்றன் பின் ஒன்றாக விலக்கவேண்டாம். மூலத்தில் நாம் நிலைத்து நிற்கும்போது அவை தாமாகவே உதிர்ந்து போகின்றன.

ரமணர் குறிப்பிடும் முயற்சி என்பது என்ன தெரியுமா? திசை திருப்பும் மற்ற எண்ணங்களை நீக்கி விட்டு நான் என்ற எண்ணத்தை பிடித்துக் கொள்வதுதான். மனத்தை ஒருமுகப்படுத்துதல்

என்பது பயிற்சியால் தான் முடியும். மற்ற எண்ணங்களுக்குக் கொடுக்கப்படும் கவனத்தை நான் எனும் எண்ணத்துக்குத் திருப்பவேண்டும்.

இதைத் தான் மனத்தால் மனத்தைக் காணல் என்கிறோம். நிலைத்த அமைதி நிலவும் வரை கவணம் தொடரப்படவேண்டும்.

'முயற்சி எவ்வளவு காலம் செய்யப்பட வேண்டும்?' என்று கேட்கலாம். மனம் வெளிக்கிளம்பும் வரை இதயத்தில் மனம் நிலைத்து நிற்கும் வரை, முயற்சித் தேவையாகிறது. வழியில் அமைதியும், நமது இயல்பான நிலை குறித்த எண்ணமும் தோன்றுகின்றன. பின் ரமணர் கோஹனுக்குக் கூறியதைப் போல, முயற்சிக்குரிய நேர் நிலை நோக்கத்தையும் நிறுத்த பழகிக் கொள்ள வேண்டும். அப்போது மனத்திற்கு மூலமாக உள்ள தூய உணர்வு நம்மைப் பாதுகாக்கத் தொடங்கும். முயற்சிக்கான தேவை முடிந்து போகும். நம்முடைய இயல்பான நிலையாகிய இலக்கிற்கு நாம் வந்துவிட்டோம்.

* * * *

# அருளைப் பெறுதல்

மகரிஷி: நீங்கள் சரண் அடைந்திருந்தால், கடவுளின் ஆணைப்படி நடக்க வேண்டுமே தவிர, உங்களுக்குப் பிடிக்காதவை குறித்து வருந்தக் கூடாது. வெளித் தோற்றத்திலிருந்து நாம் உறுதியாக கூற முடியாது.

- டாக்ஸ் 43 ப. 49

ஆத்ம ஞானத்திற்கு இரு வழிகளே உண்டு என்று ரமணர் அடிக்கடி கூறுவார்: மற்ற எண்ணங்களை விலக்கி 'நான்' எண்ணத்தைப் பற்றிக் கொண்டு உள்ளே செல்லுதல் அல்லது உயர்சக்தியிடம் முழுவதுமாகச் சரணடைதல். முதலாவது, மனத்தைச் சிறந்த முறையில் பயன்படுத்தி உண்மையை உணர்வதற்கு உதவும். இருப்பினும் மனத்தை ஒரே எண்ணத்தில் செலுத்தி, ஆற்றலை ஒருமுகப் படுத்துவது என்பது இவ்வழியில் தேவை. அப்போதுதான் மனம் வலிமை பெறும். இறந்த கால வாசனைகளாலும், பொருள்களால் கவரப்பட்டு வெளிக்கிளம்புவதாலும் மனம் பலவீனமடைகிறது. அது காரியத்தைச் சாதிக்காது. பகவான் கூறும் சரணாகதி மிக நல்லது. அதில் கடவுளின் சக்தியை முழுவதுமாக நம்பவேண்டும். எல்லாமே குருவின் வலிமையால் நடக்கிறது என்பதை உணரும் போதுதான் அது சாத்தியமானது. எனவே சரணாகதி என்பது எளிமையாகத் தோன்றினாலும், உண்மையில் அவ்வாறு அன்று. ஏனெனில் சரணடைந் தபின்னர் கேள்வி கேட்கும் உரிமை

இல்லாது போகிறது. நடப்பது எல்லாமே குருவருளால் நடக்கிறது, என்று அறிய வேண்டும். எது சிறந்தது என்பது குருவுக்குத் தெரியும். நடப்பது குறித்துக் கேள்வி கேட்க நமக்கு உரிமையில்லை நமக்கு எதிராகக் காரியங்கள் நடக்கும் போது நம்மால் கேள்வி கேட்காமல் இருக்க முடியாது குருகூட நம் குரலுக்கு முழுவதும். செவிசாய்க்க வில்லை என்று எண்ணுகிறோம். தேவராஜ முதலியார், சிலகாலம் ஆஸ்ரமத்திலிருந்து புறப்பட்டுச் செல்ல விரும்பினார். பகவான் தமக்கு போதுமான அளவு அருள் புரியாமல் காலத்தை நீட்டிக்கிறார் என்ற வருத்தம் அவருக்கு. பழைய ஹாலுக்குச் சென்று பகவானிடம் சிவப்பிரகாசம் பிள்ளை எழுதிய சில வரிகளை படிப்பதன் மூலம் தம் எண்ணத்தை வெளிப் படுத்தினார். பகவான் ஓரிரு நிமிடங்கள் மௌனமாக இருந்துவிட்டுப் பின்னர் கூறினார், "நான் செய்கிறேனோ இல்லையோ நீங்கள் சரணடைந்து விட்டுச் சும்மா இருக்க வேண்டியது" இதன் கருத்து என்ன என்றால் நாம் சரணடைந்த பின்னர் பகவான் நம்மைக் காப்பாற்ற வில்லையே என்று எண்ணக் கூடாது என்பதுதான். ஏகநாத ராவ் என்பவர் ஒரு சமயம், அருளை உணர முடியவில்லையே என்று வருத்தத்தோடு கூறினார். சரணாகதி என்பது வெறும் பேச்சளவிலோ அல்லது ஒரு காரணம் குறித்தோ அமையக் கூடாது என்று ரமணர் அவருக்கு எடுத்துக் கூறினார். நமக்காகச் செயல்புரிய குருவுக்கு நாம் அனுமதி கொடுக்கிறோமா? இல்லை என்பது தான் பதிலாகிறது. ஏனெனில் குருவின் வலிமையை நாம் முழுவதும் உணரவில்லை.

விசாரம், சரணாகதி ஆகிய இருவழிகளிலும் சில நடைமுறைச் சிக்கல்கள் உண்டு என்றால், 'நாம் செய்ய வேண்டியது என்ன?' இதற்கு தீர்வே இல்லையா?' ரமணர் இந்த இருவழிகளும் ஒன்றுக் கொன்று மாற்றாக அமைகின்றன என்று கூறுவது கூட கருத்துத் தெளிவிற்காகவும் நடைமுறைப் பயிற்சிக்காகவும் தான். மனிதர்களுடைய பலவீனம் ரமணருக்குத் தெரியும். எனவேதான் விசாரத்தையும் சரணாகதியையும் அவர் சேர்த்தே செய்யச் சொல்லுகிறார். ரமண வழியில் விசாரத்தை மேற் கொண்டால் மனம் தானாகவே சத்குருவின் அருள் இன்றி தனது மூலத் தானத்தை அடைய முடியாது என்று அறியும். குரு அருளேயே நம்பிக் கிடப்பதானால் குருவின் சன்னிதியை உணர முயற்சி தேவை. இது விஷயத்தில் ஒரு சம்பவம் குறிப்பிடத்ததக்கது. தனக்கு மன ஆமைதி இல்லை என பரோடா மகாராணி ரமணரிடம் வேண்டினாள். ரமணர் அவளுக்கு சரணாகதியை வலியுறுத்தினார்; ஏனெனில் அவளுக்கு விசார மார்க்கத்தில் நம்பிக்கையில்லை. ஆனால் அவளோ சரணடைவது முடியவே முடியாது என்று பிடிவாதம் பிடித்தாள். அப்போது ரமணர் அவளுக்கு கிரமமான சரணாகதியை எடுத்துரைத்தார், முழுச் சரணாகதி படிப்படியாக வளரும் என்றும் கூறினார். ஆனால் மகாராணியோ குருவால் விதியை மாற்ற முடியாது என்று வாதிட்டாள். உடனே ரமணர், பக்தர்களின் சுமைகளை தாங்குவது எப்படி என்பது குருவுக்குத் தெரியும் என்று கூறினார். இங்கு கூறவரும் கருத்து என்ன என்றால் நாம் இருபாதைகளுக்கு இடையே விழுந்து விடுகிறோம். நம்பிக்கையோடு விசாரத்தைத் தொடர்வதும் இல்லை அல்லது ரமணர் கையில்

நம்மை முழுவதும் கொடுப்பதும் இல்லை. மகாராணிக்கு ரமணர் அளித்த உறுதிமொழி நம்மை உற்சாகப்படுத்தி விசார வழியில் வலிமையும் உறுதியும் அளிக்கும். அதே சமயம் நாம் ரமணர் அருளை மேலும், மேலும் சார்ந்து நிற்போம்.

ஆனால் நம்முடைய பலவீனங்கள் நம்மை வெளிப்படுத்தி விடும். நாம் பழையபடி வாழ்வைக் குறித்து சிந்திக்க ஆரம்பித்து விடுகிறோம். நம்முடைய பிரார்த்தனைகள் பதிலளிக்காத போது, நாம் நம்புவது போல் காரியங்கள் நடக்காதபோது மறுபடியும் முனகல் ஆரம்பித்து விடுகிறது. கடவுளைக் குறித்து கவலை படுபவர்கள் மீது நிச்சயமாக கடவுள் தன் கவனத்தை வைக்கிறார் என்ற பகவத்கீதையின் செய்தியை முதலில் சொல்லியாக வேண்டும். ரமணர் இதை எடுத்துக் கூறுவார். சுவாமி பிரக்யானந்தா, சீடனின் உலகியல் விவகாரங்களைக் கூட குரு கட்டுப்படுத்துவாரா என்று கேட்டபோது மகரிஷி சொன்னார், ‘ஆம், எல்லாம் தான்’. ஏனெனில் சுமை அவருடையது, அவருக்கு அதை தாங்கும் சக்தி உண்டு. துன்பம் காரணமாக நம்பிக்கைக் குறையும் போது அந்த எண்ணம் பிழையானது என்று சுட்டிக்காட்டுவார் ரமணர். அது நன்மைக்காகக் கூட இருக்கலாம். ‘செயல்கள் தோற்றத்திற்கு மாறாக மிகவும் மாறுபட்டு நடக்கலாம்’ என்பது நாம் இப்பொழுது சிந்திக்கும் வாக்கியமல்லவா! செயல் நடந்த பின்னர்தான் நாம் எப்படி காப்பாற்ற பட்டோம் என்பது நமக்குப் புரிகிறது. சிலசமயம் நல்லது போன்ற ஒன்று தீமையிலும் முடிவதுண்டு. சத்குருவின் சக்தி எல்லாவற்றையும் ஊடுருவி நோக்குகிறது. இந்த உண்மையை நாம் ஏற்றுக்

கொள்ளா விட்டால் நாம் எல்லாம் ரயில் வண்டியில் செல்லும் பயணி ஒருவன் தேவையில்லாமல் தன் பெட்டியைத் தன் தலையிலேயே சுமப்பதற்கு ஒப்பாகும். நம்முடைய குறைவை புரிந்து கொள்கிற தன்மை நீண்ட காலம் பொருந்தக் கூடிய தீர்மானங்கள் செய்ய முடியாமை ஆகியவை கடவுளின் செயல் குறித்துக் கேள்வி கேட்கச் சொல்லுகின்றன. காலம் செல்லச் செல்ல அகந்தை உருகி அழிகிறது. நாம் சத்குருவின் அருளையே நம்பி நிற்கிறோம். அப்பொழுது வாழ்க்கை சுமையாகத் தோன்றுவதில்லை. கவலையிலிருந்து விடுபட்ட அவ் வாழ்க்கையில் எப்பொழுதும் மகிழ்ச்சிதான்.

* * * *

## சத்சங்கம்

*மிதக்கும் ஒரு பொருளின் மீது சுமை ஏற்றினால் அது மூழ்கிப்போகும். அது போல சத் சங்கத்தினால் மனம் இதயத்தில் மூழ்கும்.*

*- டாக்ஸ் - 223 ப. 186*

மனம் ஏன் இதயத்தில் மூழ்க வேண்டும்? ஆனந்தமாம் நம் இயல்பை நாமே உணர அது ஒரு வழிதான். விசாரத்தால் உள்நோக்கிச் சென்று இதயத்தில் நிலையாக இருப்பது என்பது வலிமையான மனத்தால் மட்டுமே முடியும். இங்கு வலிமை என்பது ஒரே எண்ணத்தில் இருப்பதைக் குறிக்கும். பொருள்களின் மீது கொள்ளும் பற்று, இறந்த நால வாசனை ஆகியவை மனத்தை பலவீனமாக்கும். பலவிததமான எண்ணங்களின் பிடி உறுதியாகி, தேவையான எண்ணத்தை நிலை குலையச் செய்யும். மூச்சுக் கட்டுப்பாடு இதனைக் கட்டுப்படுத்தும். மனம் சாந்தி அடைகிறது. ஆனால் அது தற்காலிகமே. எண்ணங்களின் போராட்டம் மறுபடியும் தொடர்கிறது. இந்நிலையில் சாதுக்களின் தங்கமே மனத்தை நீண்டகாலம் அமைதிப்படுத்தும்.

ரமணர் உடலில் வாழ்ந்த போது, அவரது அன்றாட நிகழ்ச்சி நிரலில் மாலைக்காலம் சிறப்பான இடத்தைப் பெறுகிறது. அவ்வேளையில் அவரைச் சுற்றி நிறைவான அமைதி சூழ்ந்திருக்கும். தொலை நோக்கோடு அசையாமல் அமர்ந்திருப்பார் ரமணர். அது ஆனந்தம் அளிக்கும் சூழலை உருவாக்கும். அவரைச் சுற்றி அமர்ந்திருப்பவர் எல்லோருமே இதனை அனுபவிக்க முடிந்தது. கேள்விகளோடு வருபவர்கள், அவர் சன்னிதியில் மௌனமாகவே

இருப்பர். அவரது மௌனம், சாந்திமிக்க புதிய அனுபவத்தை அவர்களுக்குத் தந்தது. அவர்களும் அதனை இழக்க விரும்பவில்லை.

ரமணரது பாதிப்பு மிகவும் நுட்பமாகவே இருந்தாலும், அதன் செயற்பாடு குறித்து அவரே விளக்கம் தருகிறார். குருவருள் என்பது ஸ்தூலமானது, நுட்பமானதும் கூட. அது மனத்தை வெளியிலிருந்து உள்ளே தள்ளி, உள்ளிருந்து இதயமாக மனத்தை ஈர்க்கிறது. முனிவரின் மனமோ எப்போதும் மூலத்தானத்தில் மூழ்கி இருப்பதால், பலவீனமான மனங்களை இழுத்து அமைதியாக காந்தமாகச் செயல்படுகிறது!

இந்தக் காரணத்திற்காகவே சாதுக்கள் சங்கத்தின் பெருமை குறித்து உள்ளது நாற்பது அனுபந்தத்தில் 5 பாடல்களைத் தருகிறார் ரமணர். எச்சம்மாளின் வளர்ப்பு மகள் செல்லம்மா ஒரு செய்தித்தாளில் விளையாட்டாகக் கண்ட சம்ஸ்கிருத ஸ்லோகம் குறுப்பிடத்தக்கது. அவளுக்காக ரமணர் அதனைத் தமிழில் மொழி பெயர்த்தார். அதற்கு முந்திய நாள்தான் செல்லம்மா உபவாசம் இருந்தாள். ரமணர் அவளைச் சாப்பிடும்படி கெஞ்சினார். இந்தச் செய்யுளின் விளக்கத்தை ரமணரிடமிருந்து கேட்டதும், செல்லம்மா உபவாசத்தின் மீது வைத்திருந்த மதிப்பை நீக்கிவிட்டாள். ரமணரோடு இருக்கும் போது உபவாசம் அவளுக்கு ஏன் தேவைப்படுகிறது!

சத்சங்கம் என்றால் என்ன என்பதை இங்கு நாம் சற்று சிந்திக்க வேண்டும். ஆத்மாவோடு கூட இருத்தல் அல்லது ஆத்மாவில் மூழ்கியிருத்தல்

என்பதே சத்சங்கம் ஆகும். அது நம்மால் முடிவதில்லை, எனவே ஆத்மாவில் எப்போதும் லயித்திருக்கும் ஞானிகளின் அருகில் இருக்க விரும்புகிறோம். ஆனால் அதில் செயல்முறைச் சிக்கல் பல உண்டு. உண்மையான ஞானிகளை அறிவது கடினம். அகந்தையை அழித்த முழு யோகியை எங்கே காண்பது? அவ்வாறு முழுமையான யோகியே கிடைத்தாலும், அவர்கள் சத்சங்கம் கிடைக்காது போனால் என்ன செய்வது? ரமணரிடம் பக்தர் ஒருவர் கூறிய முறையீடு இக்கருத்தை விளக்கும். அந்த மனிதர் தாம் பார்க்கும் வேலை காரணமாக ரமணரிடம் வர முடியவில்லை. அவர் என்ன செய்வார்? ரமணர் அவருக்குச் சத்சங்கத்தின் உண்மையான பொருள் குறித்து எடுத்துரைத்தார். சத்குரு எங்கும் பரந்திருக்கிறார் என்று உணர்வதே சத்சங்கம் என்றார் அவர். குரு என்பவர் வெறும் உடம்பு அல்லர் ஆனால் அருவமான, வாழ்வின் ஆதாரம் ஆவார். காலதேச வர்த்தமானங்கள் அவரைப் பாதிப்பதில்லை. குருவோடு உள்ள தொடர்பை விடாது பாதுகாப்பது என்பது தனிமனிதனைப் பொறுத்தது. அதற்கான பாதை ஆளுக்கு ஆள் வேறுபடும். ரமணரது புன்னகை தழவும் புகைப்படமோ, அல்லது அவரது வாழ்க்கை பற்றிய நூலோ, அவரது படைப்போ, அவரது இனிமையான பெயரோ, அல்லது இவை எல்லாம் சேர்ந்தோ நம்மைக் கவரலாம், ரமணரது எங்கும் பரந்த மௌனத்தில் மூழ்கி, அதே அலைவரிசையில் நிலைத்து நிற்க இவை ஊக்கியாக அமைவன.

ரமணரது சன்னிதியில் தாம் பெற்ற உயர்ந்த அனுபவம் சில காலம் கழித்து நீங்கி விடுவதாக ரமணரிடம் பல பக்தர்கள் முறையிடுவதை 'டாக்ஸ்' என்ற நூலில் காண்கிறோம். தடை நிகழ்வதாகக் கூடச்சிலர் உணர்ந்திருக்கிறார்கள். சத்சங்கத்தால் ஏற்படும் ஆதாயங்கள் மிகக் குறுகியவை என்பதை இது உணர்த்துகிறதா? 'இல்லை' என்கிறார் ரமணர். வாசனைகளே இந்த வேறுபாடுகளுக்குக் காரணம் என்கிறார் அவர். 'வாசனைகள் இருக்கும் வரை சாந்தி உடனிருக்காது', உண்மை அறிவும், சரியான அனுபவமும் பெற்ற மாணவர், குருவின் சன்னிதியில் பெற்ற அனுபவம் நிலைபெற, கடுமையாக உழைக்க வேண்டும். குருவை உடல் என்று தவறகக் கருதி, அவரது ஸ்தூலமான சன்னிதியில் பெற்ற அமைதியை இழந்துவிடக் கூடாது. அவர் நமது உள்குரு என்பதை உணர்ந்தால், நாம் அவரிடமிருந்து பிரிந்து இருத்தல் என்பதே இல்லை, அவரிடமிருந்து வெளிக்கிளம்பும் அமைதி அலைகளை உணரவும் தவறுவதில்லை.

ஆகவே சத்குருவோடு நம்மை இணைத்துக் கொள்ளவும், அவரது சன்னிதியை நிலையாக உணரவும் முயற்சி தேவை. பின் எண்ணங்களற்ற 'நான்' என்பது சத்குரு ரமணரை அடைய உதவும் பாலமாக அமையும். உறவு ஸ்திரப்பட்டால், சத்சங்கத்திற்கும் அதனால் விளையும் நன்மைகளுக்கும் முடிவே இல்லை. மனத்தின் குறைப்பாடுகள் எல்லாம் சத்குருவின் சன்னிதியாம் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படும். நாம் பிரிந்திருக்கிறோம் என்ற துயரமும் அழிந்து விடும்.

* * * *

## அது வேலையைச் செய்யட்டும்

மகரிஷி: ஜபம், தியானம் போன்றவற்றைச் செய்யச் சொன்னால் எப்போதும் தெய்வக்காட்சி கனவு, சித்திகள் போன்றவற்றை எதிர்பார்க்கிறார்கள். அவை கிட்டாது போனால் தாங்கள் முன்னேறவில்லை என்றோ, தவம் பயனளிக்கவில்லை என்றோ கூறுகிறார்கள். காட்சி முதலியவை முன்னேற்றத்தின் அறிகுறி அல்ல. தவம் செய்வதே முன்னேற்றம்தான். தேவை நிலையான தன்மையே. மேலும் நம்மை இஷ்ட தேவதையிடமோ, மந்திரத்திடமோ ஒப்புவித்து விட்டு அதன் அருளுக்காகக் காத்திருக்க வேண்டும். அவர்கள் அவ்வாறு செய்வதில்லை. நமக்குத் தெரிந்தாலும் சரி, தெரியாமல் போனாலும் சரி ஜபம் அதற்குரிய நல்ல பலனைத் தரும்.

- டாக்ஸ் 103 ப. 99

நம் செயல்கள் பலனோடு தொடர்புடையவை. செய்பவர், முயற்சி ஆகியவை அதன் இயல்புகள். வெற்றியையும் தோல்வியையும் நாம் அறிந்தறிகிறோம். ஆன்மிக வாழ்விலும் அப்படித்தான். குறுகிய காலத்திலேயே வெளிப்படையான பயன்களை எதிர்பார்க்கிறோம். ஆன்மிக வாழ்வில் பொறுமை தேவை. நாம் மனத் தளவில் வாழ்ந்து கொண்டிருப்பதால் தெய்வம் அல்லது சத்குருவின் காட்சி பெற்றால் மகிழ்ச்சியடைந்து அதனையே முன்னேற்றத்தின்

அறிகுறி என நினைக்கிறோம். கணபதிமுனி ரமணரை தேவசேனாபதியாகிய சுப்பிரமணியராகவே பல முறைக் கண்டிருக்கிறார். பகவானது தாயார் அழகம்மை அவரைச் சிவபெருமானாகவே பார்த்தி ருக்கிறார். இன்னொரு சமயம் ரமணரின் உடல் மறைந்து, அது திருச்சுழியில் உள்ள லிங்கமாகவே காட்சியளிக்க கண்டாள் அந்தத் தாய். ராகவாச்சாரி ரமணரை தட்சிணா மூர்த்தியாகவும் ஒளியாகவும் கண்டாள். பால்பிரண்டன் ரமணாஸ்ரமத்திற்கு அருகில் தங்கியிருக்கும் போது தாம் ஒரு சிறிய பையனாகி உயரமான மகரிஷியின் கையைப் பிடித்துக் கொண்டிருப்பதாக காட்சிபெற்றார்.

இந்தக் காட்சிகள் சுபமானவைதாம், ஆன்மீக வளர்ச்சியில் அவை உதவி புரிகின்றன. ஆனால், ஆன்மீகப் பாதையில் அவை தேவைதானா என்ற கேள்வி எழுகிறது. அவற்றின் தோற்றமோ, மறைவோ முன்னேற்றத்தையோ அல்லது தேக்கத்தையோ குறிக்குமா? அதுமாதிரி தொடர்பு ஏதும் இல்லை என்கிறார் ரமணர். அதுபோல காட்சி பெறாதவர்கள் மனம் குன்றி போக வேண்டாம் ஏனெனில் பெரும் பான்மையானவர் போக்கு அப்படித்தான். காட்சியைத் தேடி அலைய வேண்டாம். தெய்வ காட்சியை நாடுவது என்பது மனத்தின் எல்லைக்குள் ஏற்படும் வெற்றிக்கான ஓர் அறிகுறியே. அகப்பயணம் தொடங்கி, கவனமான விசாரத்தால் மனத்தைத் தாண்டிச் செல்லும் போது தான் உண்மையான முன்னேற்றம் உண்டாகின்றது.

கனவு என்பது தினமும் நிகழக் கூடியது. எனவே நம் குருவைப் பற்றி நாம் ஏன் கனவு காணக் கூடாது?

கனவுகளில் ரமணர் தோன்றி அறிவுரை கூறுவதை சில பக்தர் வாழ்வில் காண்கிறோம். அது தொடர்ச்சியாக நிகழ்வதும் உண்டு. நம்பியார் தன்னுடைய நூலில் கனவுகளின் தொடரைக் குறித்திருக்கிறார். அவை ரமணரின் மகா சமாதிக்குப் பின்னரும் தொடர்ந்தன. உதாரணமாக ரமணர் சமாதி இடத்தைக் குறித்து விவரமாக பல செய்திகள் தரப்பட்டன. சௌரிஸ் என்பவள் தம் நினைவுகளைக் குறிப்பிடுகையில் தாம் ரமணாஸ்ரமத்திற்கு பலமுறை வந்த போதும் எந்த உதவியும் தமக்குத் தேவைப்படவில்லை, ஏனெனில் ரமணர் அவள் கனவில் தோன்றி எல்லாக் கேள்விகளுக்கும் பதிலளித்ததாகக் குறிக்கிறார். இங்கு ஒன்றைக் குறிப்பிட்டாக வேண்டும். கனவு காண்பது என்பது இயற்கை ஆனால் அவற்றின் மீது அதிக கவனம் செலுத்தக் கூடாது. ஏனெனில் ஆன்மீக விழிப்புணர்வு உண்டான பின்னர் நனவுகூட கனவினைப் போன்றது. மேலும் கனவு என்பது மனத்தின் செயல், அது ஆத்மா என்ற திரையில் நிகழ்கிறது. எனவே காட்சியைவிடக் காண்பவர் மீது கவனம் செலுத்த வேண்டும்.

சித்திகளைப் பொறுத்தவரையில், அவற்றை கவனிக்கவே வேண்டாம்; ஏனெனில் ஆன்மீகப் பாதையில் அவை இடையூறுகள். உண்மையான பாதையிலிருந்து மனத்தை அவை மாற்றிவிடும். உண்மையைத் தேடுதலிலிருந்து மாறி, நிலையற்ற பேரும் புகழும் பெற ஆசை தோன்றும்.

ஆகவே நேர்பாதையில் சென்று நம் இயல்பைக் கண்டறிந்து நான் என்பதை உணரவேண்டும் என்ற

பாதையில் நேராக நம்மை திருப்பிவிடுகிறார் ரமணர். ஆகவே சாதனைக் காலத்தில் எல்லா வற்றையும் ரமணரிடம் விட்டுவிடுவது நல்லது. தொடக்கத்தில் நமக்கு அவரிடம் உள்ள நம்பிக்கை பொறுமையின்மை காரணமாகக் குறைந்து விடுகிறது. ஒருவர் ரமணரோடு தங்க வேண்டும் என்பதற்காக எல்லாவற்றையும் துறந்துவிட்டு ரமணாஸ்ரமத்தில் தங்கினார். சில ஆண்டுகள் கழித்து ரமணர் அருளுக்காக அவரிடம் உறுதி வாங்கினார். "உங்கள் பக்திதான் உங்களை இங்கே அழைத்து வந்திருக்கிறது. அந்த நம்பிக்கையை இப்பொழுது ஏன் சந்தேகிக்கிறீர்கள்?" என்று மெதுவாக கேட்டார் ரமணர். 'நாம் முன்னேற்றம் அடையவில்லை' என்ற எதிர்மறை எண்ணம் சிலசமயம் சத்குரு போதுமான அளவு நமக்கு உதவி செய்யவில்லை என்ற எண்ணத்தை உருவாக்கி விடுகிறது. குரு என்பவர் உடனே கொளுத்தும் வெடிமருந்து என்றும் நம்முடைய முன்னேற்றத்திற்கு தடை, போதுமான அளவு அவர் அருள் கிடைக் காமையே என்றும் எல்லோரும் நினைக்கிறார்கள். ரமணர் இவ்விதமான எண்ணங்களுக்குப் பலவிதமான பதில்கள் அளிக்கிறார். முன்னேற்றத்தை மதிப்பிடுவதை அவர் ஆதரிப்பதில்லை. ஏனெனில் மாற்றம் என்பது மனத்தளவிலேயே அமையக்கூடியது. ஆன்மீகப் பயிற்சி நிலையாகத் தொடர்ந்தால் முன்னேற்றம் நிச்சயமாக உண்டு. ஆனால் பயிற்சியில் பொறுமை தேவை. சாதனையின் பயனுள்ள தன்மையைக் குறித்தும் அதிலுள்ள நம்பிக்கை குறித்தும் ரமணர் அடிக்கடி எடுத்துக் கூறுவார். மந்திரம், உருவத்தியானம், ஆத்ம விசாரம் ஆகியவை

தேவையான வேலையைச் செய்யும். என்ன வேலை? மனத்திலிருந்து வாசனைகளை நீக்கி ஒரே எண்ணம் தொடர்ச்சியாக அமைய அதற்கு வலிமை அளிப்பதுதான் அந்த வேலை. ரமணர் கூறுவதைப் போல நாம் நம்மை மந்திரத்திடமோ, கடவுளிடமோ ஒப்படைத்து விட்டு அருளுக்காகக் காத்திருக்க வேண்டும். நாம் செய்யும் முயற்சி எதுவும் வீணாகாது என்ற நம்பிக்கையோடும், நிச்சயத்தோடும் முன்னேற வேண்டும். தொடர்ந்து நிலையான பயிற்சி இருந்தால் போதும், விளைவுகள் நாம் எதிர்பார்ப்பதைவிட அதிகமாகவே இருக்கும். நிலைத்த நம்பிக்கையும் உறுதியான பயிற்சியும் கொண்டவர்களுக்கு நிச்சயம் வலிமை உண்டு என்று உறுதிப்படுத்துகிறார் ரமணர். சந்தேகப்புயல் மனத்தைத் தாக்கும் போது கருணையுள்ள ரமணரை நினைத்துக் கொள்வது சிறந்தது.

* * * *

## நாம் எப்பொழுதும் தியானிக்க முடியுமா?

நடேசர்: எனக்கு என்று ஒரு வேலை இருக்கிறது. இருப்பினும் நான் எப்போதும் தியானத்தில் இருக்க விரும்புகிறேன். இவை ஒன்றுக்கொன்று முரண்படாதா?

மகரிஷி: இங்கு முரண் எதுவும் இல்லை. இரண்டையும் அப்பியாசம் செய்து நம் சக்தியை நாம் வளர்த்துக் கொண்டால் இரண்டையுமே நம்மால் கவனிக்க முடியும்.

- டாக்ஸ் 30 ப. 37

இங்கு ஓய்வில்லாத ஒரு மனிதர் ஆத்ம சாதனைக்கு அதிக நேரம் ஒதுக்க முடியாமல் ரமணரிடம் வந்து "தாம் செய்யும் வேலை சாதனைக்கு குறுக்கீடாக அமையுமா" என்று கேட்கிறார். 'டாக்ஸ்' என்ற நூலில் பல சாதகர்களுக்கு இந்தச் சிக்கல் இருப்பதை காணமுடிகிறது. அவர்களுக்கு பல கடமைகள் உண்டு: குடும்பக் கட்டாயங்கள், மகளின் திருமணம், மகனின் படிப்பு என்று பல. இவற்றைச் செய்யும்போது ஆத்ம சாதனை செய்ய அவர்களுக்கு நேரம் ஏது? வேலையும் தியானமும் ஆகிய இரண்டுமே எந்த அளவில் செய்யப் படவேண்டும் என்ற கேள்வி எழும். உள்மனத்தில் அவை ஒன்றுக் கொன்று மாற்றாகத் தெரியும். ஒரு சமயத்தில் ஒன்றைத்தான் நம்மால் செய்யமுடியும். இந்த ஐயம் அடிக்கடி எழுகிறது. ஒருவர் லண்டனில் வாழும் போதே, காட்டில் உள்ள ஓர் ஆஸ்ரமத்தில் விளங்கும் மன அமைதியைப் பெற முடியும் என்ற ரமணரின் உறுதியான வார்த்தைகளை பால் பிரண்டன் ஒப்பக்

கொள்ள சிரமப்பட்டார். சிலர் தியானிப்பதற்காகத் துறவு மேற்கொள்வதையும் நாம் காண்கிறோம் ரமணர் திரும்பச் சொன்னதைக் கேளாமல் நடனானந்தர் துறவு மேற் கொண்டார். பிறகுதான் சாதனை புரிய காவித்துணியும் வெள்ளை ஆடையும் ஒன்றுதான் என்பதை அறிந்து கொண்டார். கர்மம், ஞானம் என்ற இரு வாள்களைக் கொண்ட ஜனகர், சூடாலை ஆகியோர் கதை யோக வாசிஷ்டத்தில் கூறப்படுகிறது. அவற்றை விதிவிலக்காக கொள்கிறோம்.

இந்த அனுகுமுறையின் அடிப்படைகளைச் சற்று கவனித்தறிய வேண்டும். கடமைகள் உலகியற்கப் பாற்பட்டவை என்று கருதப்படுகின்றன, ஏனெனில் அச்சூழலில் அவற்றைச் செய்தே ஆக வேண்டும். தியானம் என்றுச் சொல்லப்படுவது ஆன்மீகப் பயிற்சிக்கு ஒதுக்கப்படும் காலமே. இந்த வேறுபாடுகளெல்லாம் எந்த அளவுக்குச் சரியானவை. ஒவ்வொன்றையும் தனித்தனி பெட்டியாக நாம் கருதுவது சரியா? ஒவ்வொன்றும் ஒரு முழுநேர வேலையா? நாம் தேர்ந்தெடுக்கின்ற கடமையிலோ, தியானத்திலோ நாம் முழுவதுமாக மூழ்கியிருக்க முடியுமா?

இனி முழுநேரத் தியானம் பற்றிச் சிந்திப்போம். நாம் பக்குவப் பட்டு நேரிடையாக ஒரே எண்ணப்பாதையில் நேரிடையாகக் குதித்தால் அப்போது மனம் இயல்பாகவே தன் மூலத்தில் ஒடுங்கும். பொதுவாக, பலவித எண்ணங்களால் சிதறிப்போய் மனம் பலவீனமடையும்போது தியான நேரங்கள் தூங்கும் நேரங்களாக அமைகின்றன.

தமோகுணமும் சோம்பேறித்தனமும் தவறுதலாக சத்வகுணம் என்று கருதப்படலாம். ரமணரிடம் வந்து ஒருவர் 'ஏன் உடனடியாகத் தியானம் செய்யக் கூடாது' என்று கேட்டார் 'முயற்சி செய்து பாருங்கள்' என்று பதில் சொன்னார். வாசனைகள் நம்மை விடமாட்டா என்றார் ரமணர். மனம் அடிக்கடி வெளியேத் தள்ளப்பட்டு வேறு செயலில் நம்மை ஈடுபடவைக்கிறது. படிப்படியாக தியானம் வாசனைகளை அழித்த பின்னர் அந்த வேலை யிலிருந்து நம்மை நாம் விடுவித்துக் கொள்கிறோம். தொடர்ந்து தியானிப்பது என்ற கருத்தே நடைமுறைக்கு ஒவ்வாதது என்று கூறலாம்.

அதற்கு எதிராக உள்ளது எப்படி? நாம் ஏன் எப்பொழுதும் வேலை செய்யக் கூடாது? இதுவும் நடைமுறைக்கு ஒவ்வாததுதான். முதலாவதாகப் பலருக்கு வேலை என்பதே கட்டாயமான ஒன்றாக இருப்பதில்லை. அவர்களைப் பொறுத்த அளவில் வேலை என்பது, வயிறு பிழைப்பதற்காகவே. நாம் விரும்பினாலும் எப்பொழுதும் வேலைக் கிடைக்காது. வேலை செய்வதோ அல்லது அதைத் துறப்பதோ நம் கையில் இல்லை, நம் கர்மத்தைப் பொறுத்தது.

எனவே எப்பொழுதும் தியானிக்கவும் முடியாது, அது போல எப்பொழுதும் வேலை செய்யவும் முடியாது, எனவே என்ன செய்வது? இங்குதான் ரமணர் நமக்கு உதவி செய்கிறார். வேலை செய்தல், தியானித்தல் ஆகிய இரண்டுமே படிப்படியாக ஒரே சமயத்தில் செய்ய வேண்டிய அவசியத்தை அவர் அடிக்கடி வலியுறுத்துவார்.

காலம் செல்ல செல்ல வேலைக்கும் தியானத்துக்கும் இடையே உள்ள வேறுபாடு அழிந்துபோகும். எந்த வேலை செய்தாலும் நாம் தியானித்துக் கொண்டே இருப்போம். இந்நிலையை அடைய, விசாரம் என்பது எல்லா நேரத்திலும் எல்லாச் சூழலிலும் செய்யக்கூடியதே என்பதை நினைத்துப் பார்க்க வேண்டும். அது மனத்தைத் தூய்மைப்படுத்தி வலிமையாக்கும். வேலை என்பது பளுவானதாக இருப்பதில்லை ஆனால் அதைப் பற்றிய எண்ணமே பளு என்பதை நினைவில் கொள்ள வேண்டும். நாம் செய்கிறோம் என்ற எண்ணம் வலிமையுள்ளதாக இருக்கும் வரை, வேலையை எப்படிச் செய்வது என்ற கவலையும், அதன் பயன் குறித்த பயமும் கட்டாயம் இருக்கும். ஆனால் தியானமும் ஆத்ம விசாரமும் இக்கருத்தை வேரறுத்துவிடும்.

தியானத்தில் வெற்றி என்பது சிதறாத மனத்தின் வலிமையைப் பொறுத்தது. இது மனத்தின் தூய்மையைச் சார்ந்து நிற்கிறது. கடவுளுக்கு அர்ப்பணிக்கப்பட்டு பயனைச் சார்ந்திராத வேலைகள் மனத்தைத் தூய்மைப்படுத்தி முறையான தியானத்திற்கு அழைத்துச் செல்லும். தியானம் வேலையில் கவனத்தையும் கடினமற்றத் தன்மையையும் தரும். தியானத்தின் பயன் அந்த நேரத்தில் மட்டுமன்றி எந்த நேரத்திலும் வேலையைப் பயமும் கவலையும் இன்றிச் செய்ய உதவும். வேலையின் அணுகுமுறை படபடப்பு நீங்கியதாக இருக்கும். இவ்வாறு தியானமும் வேலையும் சாதனைக் காலத்தில் ஒன்றுக்கொன்றுத் துணை செய்கின்றன.

உண்மையில் செயலைச் செய்வது யார்? காரியத்தின் வலிமை, வெற்றி ஆகியவை நம் விருப்பத்தின் படியா அமைகிறது? இதைப் பற்றி நினைப்பது கடினமானது. செயலைச் செய்வதற்குரிய வலிமை என்பது நம்முடையது அன்று. நான் என்பதன் உண்மையை அறிய உதவும். ஆத்ம விசாரம் படிப்படியாக எல்லாமே, ஓர் உயர் சக்தியால் ஒழுங்கு படுத்தப்படுகிறது என்பதை உணர்த்தும். நாம் இந்த நிலையை ஒப்புக் கொண்டால் துன்பத்திலிருந்து விடுபடுவோம்.

இல்லையேல் அதில் மாட்டிக் கொள்வோம் என்கிறார் ரமணர். தியானம், ஆத்ம விசாரம் வேலையை ஒழுங்காக செய்தல் ஆகியவற்றை திரும் பத்திரும்பச் செய்தால் மனம் வலிமை பெறும். மனத்தை உள்முகப் படுத்தி அதன் மூலத்தை அறியச் செய்வதில் சுறுசுறுப்பாக இருக்க வேண்டும். இது முக்கியமானது. பின் ரமணர் சொல்லுவதைப் போல ஒரே சமயத்தில் பல செயல்களை ஒழுங்காகச் செய்யமுடியும். பின்னர் செயலோ, செயலின்மையோ எல்லாமே ஒன்றுதான். அந்த மௌனத்தை, அந்த ஆனந்தச் சூழலை எதுவுமே கலைக்க முடியாது.

* * * *

# செயலனைத்தும் வழிபாடுதான்

அன்றாட வாழ்க்கை ஆன்மீக வாழ்க்கை யிலிருந்து வேறுபட்டது என்று நினைக்கும் வரை இந்தத் தொல்லைகள் எழும். ஆன்மீக வாழ்க்கையை சரியாகப் புரிந்து கொண்டால் அது அன்றாட வாழ்விலிருந்து வேறுபட்டது அன்று என்பது புரியும்.

- டாக்ஸ் *376* பக். *341-342*

ஆத்ம ஞானமும் அன்றாட வாழ்வும் தனித்தனியானவை என்று கருதுகிறோம். செயல்களை உலகியல் சார்ந்தவை, அதிலிருந்து வேறானவை எனப் பிரிக்கிறோம். வேலைக்கும் ஞானத்திற்கும் இடையே முரண்பாடு இருப்தாகக் கருதுகிறோம். இந்த எண்ணம் ஆழங்கால் பட்டதொன்று. தவத் திற்காக வீட்டை விடுவதோ, மடத்தில் சேருவதோ, உறவுகளைத் துறப்பதோ, இமயமலையில் அலைவதோ இந்த நம்பிக்கையைச் செயல்படுத்தவே. நாம் ஈடுபட்டு இருக்கும் செயல்களிலிருந்தும், சூழ்நிலை களிலிருந்தும் விலகுதல் ஆன்மீக இலக்கை அடைய அவசியமானது என்பதே அந்த நம்பிக்கை. சிலர் அதற்காகக் குடும்ப சுகத்தையும் துறக்கத் தயாராகிறார்கள். ஆனால் அதற்குரிய ஆன்மீக முன் னேற்றம் அவர்களிடம் இல்லாது போகலாம். உள்ளே நிலைத்து நிற்கும் பக்குவம் இல்லாதவரை வைராக்கியம் என்பது வருத்தத்திலேயே முடியும். பந்தத்தை அறுத்தெறிய எல்லோராலும் முடியாது.

கடவுளைச் சார்ந்தவை என்றும், உலகைச் சார்ந்தவை என்றும் நாம் மனத்தால் பிரித்து அறியக் கூடியதை இந்தச் சூழலில் நாம் ஆழமாக பரிசோதிக்க வேண்டும். உண்மையில் நாம் செய்வது செயல்களை

உடைப்பது தான். இந்த பிரித்தறியும் அணுகுமுறையே நம்முடைய பல பிரச்சினைகளுக்கு காரணம் என்று ரமணர் திரும்பத்திரும்ப கூறுகிறார். வாழ்க்கையில் தேவையானது மனத்தின் அணுகு முறையே. ஒரு பக்தர் தாம் சம்சாரத்திலிருந்து விடுதலை பெறத் தம் மனைவியையும் குழந்தைகளையும் துறக்கப் போவதாக கூறியது போல, 'ஏன்? அவர்கள் என்ன பாவம் செய்தார்கள்'? என்று நகைச்சுவை யோடு கூறிவிட்டு, 'சம்சாரம் என்பது உங்கள் மனத்தில் தான் இருக்கிறது' என்று மேலும் கூறினார். மற்றொரு பக்தர் ரமணரின் அருகில் இருப்பதற்காக தாம் வேலையை விட விரும்புவதாக கூறியபோது தம் இருப்பை அந்த பக்தர் இதயத்தில் உணர்ந்தால் போதும் என்றார் ரமணர். ஆத்ம விசாரம் காட்டில் செய்யப்படுவதைப் போல இலண்டனில் செய்ய முடியாது என்று பால் பிரண்டன் கூறியபோது இரண்டுமே ஒன்று தான் என்று உறுதியாகக் கூறினார். மாரிஸ் ஃப்ரைடுமென் என்பவர் ஒரே சமயத்தில் ஆன்மீக சாதனையும், உலகியல் செயல்களும் செய்யமுடியாது என்று சொன்ன போது, இவையெல்லாம் மனத்தைப் பொறுத்தவை என்றும் வெளிச்சூழ்நிலைகள் ஒரு மாறுதலையும் உண்டு பண்ணமாட்டா என்றும் ரமணர் அவருக்கு அறிவுரை பகர்ந்தார். கிருஷ்ணர், ஆதிசங்கரர், ஜனகர், சுகர், ஆகியோரைப் பற்றியும், இக்கருத்தை வலியுறுத்த ரமணர் எடுத்துக் காட்டுவார்.

'உலகத்தில் இருந்து கொண்டே அதில் எப்படி இல்லாமலிருப்பது?' ரமணருடைய உபதேசம் நமக்கு நடைமுறையில் எவ்வாறு பொருந்துகிறது என்பதை உணர வேண்டுமானால் இதைத் தெரிந்து

கொள்ளுவது முக்கியம். நம்மில் பலருக்கு சும்மா இருப்பதற்கு நேரமே இருப்பதில்லை. இடைவிடாத உலகியல் செயல்களுக்கும் உண்மையைத் தேடுதலுக்கும் இடையே உள்ள இடைவெளியை நீக்க வேண்டுமானால் நாம் என்ன செய்ய வேண்டும்? எப்படிச் செயலாற்ற வேண்டும்?

அது கடினம் என்ற எண்ணத்தை முதலில் விட்டு விட வேண்டும். அத்தகைய எண்ணங்கள் உண்மையானவை அல்ல. அவைதான் நம்மைத் தடைபடுத்துகின்றன. இரண்டாவதாக நாம் கருத்தில் கொள்ள வேண்டியது நமது இயல்பு தூய்மையான ஆனந்தம் என்பதே. பின்னர் தியானத்திற்கான அதிக நேரத்தை நன்கு பயன் படுத்திக் கொள்ள வேண்டும். அது ஐந்து அல்லது பத்து நிமிடங்களாக இருந்தாலும் சரி. முழுமையாகப் பயன்படுத்தப் பெற வேண்டும். காலம் என்பது அவ்வளவு முக்கியமில்லை. ஆழமாக உள்நோக்கிச் செல்லுதல் போதுமானது. 'அது என்ன செய்யும்?' என்று கேட்கலாம். வேலை தியானத்திற்கு இடையூறாக ஆகாது. தியானத்திற்கு ஒதுக்கப்படும் நேரம் உள்வேகத்தை உருவாக்கி மனச் சாந்தியைத் தரும்; அது நாள் முழுவதும் இருக்கும். அப்பொழுது நாம் எந்த வேலைச் செய்தாலும் அதை ஒருமுகப்பட்ட மனத்தோடு செம்மையாகச் செய்யமுடியும்.

மேலும் உள்ளிருந்து ஒரு குரல் நம்மை அழைப் பதை உணரலாம். அது எந்த நேரத்திலும் வரலாம்; பத்திரிகைப் படிக்கும் போதோ, தொலைக்காட்சித் தொடர் பார்க்கும் போதோ அமையலாம். ஆனால் அது வரும் போது அதனைப் பற்றிக் கொண்டு சிறந் தப் பயனைப் பெற வேண்டும் என்கிறார் ரமணர்.

தியானத்திற்குறிய நேரத்தை அதிகமாக்க ண்டும். ஓய்வு நேரத்தை ஒழுங்காகப் பயன்படுத்த ண்டும். பகலில் தியானத்திற்கு என்று சிறிது ஓய்வு ரத்தை ஒதுக்கலாம். ஆம், அதனை ஏன் வீணடிக்க ண்டும்? அந்த நேரத்தைக் கூட அகச்சக்தியை வாக்க நாம் ஏன் பயன்படுத்தக் கூடாது? தியில் அது ஒன்றுதான் நிலைத்து நிற்கக் கூடியது றும் நம் மன அமைதியை காக்கக் கூடியது றும் உணரப்படும். நம்மை அறியாமலேயே நம் த்தின் நோக்கு மாறுபடுகிறது, மனம் சமநிலையில் க்கும் போது அதன் குறைகள் அழிந்து ாகின்றன.

பின்னர் செயல் என்பது பளுவாக ப்பதில்லை. தியானத்தைப் போலவே, அதுவும் வு தரும். கோவிலுக்கும் சந்தைக்கும் டையேயுள்ள வேறுபாடு மறைகிறது. எல்லாமே தமாகிறது. உலகியல் வாழ்வும் ஆன்மீக வாழ்வும் றாகின்றன. எல்லாச் செயல்களும் ஒன்றாகவே க்கப்படுகின்றன. எல்லாமே வழிபாடாகி வாழ்வு ம் பெறுகிறது.

* * * *

## அது சமையல் வேலை மட்டும்தானா?

பகவான்: உன் மனம் தியானத்தை விரும்புகிறது.

சுப்பலட்சம்மாள்: என்ன பயன்? இங்கு சமையல் வேலை தானே.

பகவான்: கைகளும் கால்களும் வேலையை செய்யட்டும். நீ அவையில்லை. நீ அசையாத ஒன்று. இதை உணராத வரை பிரச்சனைகள் வளர்ந்து கொண்டே இருக்கும். வேலை கடினமாக இருக்கும். நாம் வேலை செய்யாது இருந்தாலும் கூட, மனம் அலைந்து கொண்டே இருக்கும்.

நினைவுகள் ரமணவழி மார்ச் 1989

ஆயிரத்து தொளாயிரத்து முப்பத்தைந்து வரை ரமணாஸ்ரம சமையல் அறை ஒரு வேதாந்தப் பள்ளியாகவே விளங்கியது. சமையல் வேலைகளில் உதவி செய்து கொண்டே ரமணர் சாதனையின் நடை முறைப் பண்பை விளக்குவார். எல்லா உதவியாளர் களுமே சமையலறையில் வேலை செய்ய உடனே ஒப்புக் கொண்டார்கள், எனெனில் ரமணர் அருகில் இருக்க அது ஒரு வாய்ப்பைத் தந்தது. ரமணர் முன்னிலையில் அந்த பெரிய அமைதியை அனுப வித்து, கேள்விகளுக்கு அவர் அளிக்கும் பதில்களை கேட்டறிய ஒவ்வொருவரும் விரும்பினர். ஆனால் சமையலறை வேலையோ தியானத்திற்குச் சிறிது நேரமும் அளிக்காது. எனவே தான் அந்தப் பெண்மணி சமையலறை வேலையை குறை கூறினாள். நம்முடைய கடமைகள் தியானத்திற்கு இடையில் வருகின்றன என்ற எண்ணம் பொது

வானது. நனவில் பெரும் பகுதியை நாம் நம்முடைய தொழிலில் செலவழிப்பதால் வேலையைக் குறித்த நம்முடைய நோக்கில்தான் மகிழ்ச்சி உள்ளது.

உண்மையில் நாம் செய்ய வேண்டிய வேலை நாம் விரும்பி ஏற்ற ஒன்று அன்று. அது நம் உடலெ டுக்கக் காரணமான கர்மத்தின் விளைவு ஆகலாம். இந்த வேலையின் விளைவாக நம் வாழ்க்கை வெறும் பசிக்கு உணவு தேடுவது மட்டுமாக ஆகிவிடுகிறது. இந்நிலை மாறவேண்டும். ஓய்வு எடுத்து கொள்ள வழி செய்ய வேண்டும். வேலை செய்ய நிலையான உற்சாகம் இல்லாதபோது வாழ்க்கை வெறுப்பக் குரியது ஆகிறது. ஆனால் சாதிக்க வேண்டியது ஒன்றுமே இல்லாத ரமணர் தாம் செய்கின்ற செயல்களை அனுபவித்துச் செய்ததைக் காண்கி றோம். காய்கறிகள் நறுக்குவது, அச்சுப்படி திருத்து வது, நோட்டு தைப்பது, புரியாத தத்துவக் கோட் பாட்டை விளக்குவது ஆகிய எல்லாவற்றிலுமே அதே உற்சாகமும் ஆர்வமும் இருக்கும். தாம் செய்கின்ற வேலையில் கவனம் செலுத்துமாறு ரமணர் தம் பக்தர்களுக்கு அறிவுரை கூறுவார். ஒரு நாள் மாலை அவருடைய உதவியாளர் ரெங்க சாமியுடன் மலையிலிருந்து இறங்கி வரும் பொழுது ஒரு பெருக்குபவர் அவ்வழியில் வந்தார். அவர் ரம ணருக்கு முன் நமஸ்காரம் செய்ய விரும்பினார். வேலையை ஒழுங்காகச் செய்வதே நமஸ்காரம் என்று கூறிவிட்டு ரமணர் ஹாலில் நுழைந்தார். அங்கு உட்கார்ந்திருந்தவர்கள் எழுந்து வணக்கம் சொல்லிவிட்டுப் பின்னர் அமர்ந்தார்கள். ரமணர் சொன்னார், 'உண்மையான நமஸ்காரம் என்பது இப்படி உட்காருவதோ எழுந்திருப்பதோ அன்று. வேலையைச் சிரத்தையுடன் செய்வது.' சமையலறை யில் உணவுகள் சுவையாகத் தயாரிக்கப்பட

வேண்டும் என்பதற்காக விளக்கமான அறிவுரை கொடுப்பார். ஒழுங்காக அரைப்பது, காய்கறிகளை மூடிவைப்பது ஆகியவற்றில் கவனம் செலுத்தச் சொல்லுவார். ஒரு சமயம் ஒரு தேவாரப் பாடலை லோகம்மா தவறாகப் படித்தாள். அதைக் கவனித்த பகவான், 'அது அப்படியில்லை, மறுபடியும் படி, என்று அவளிடம் கூறினார். அவள் பலமுறை படித்த பொழுதும் அதே தவறைத் தொடர்ந்து செய்தாள், ஏனெனில் அவளது கவனம் படிப்பதில் இல்லை. சமையலறைக்கு திரும்பும் முன்னர் அதைச் சரியாகப் படித்து விட்டு செல்லுமாறு எடுத்துரைத் தார் பகவான்.

நாம் நம்முடைய கடமைகளை ஒழுங்காகச் செய்ய வேண்டுமென நினைக்கிறோம், ஆனால் முடிவ தில்லை. ரமணருடைய அறிவுரை வீணாகிப் போவது போல் தோன்றும். நாம் எடுத்துக் கொண்ட வேலை நம்முடைய விருப்பத்துக்கு உகந்தது அன்று என்று நினைக்கலாம். உண்மையில் நம்மால் அதனை சமாளிக்க இயலாமையே இங்கு உண்டாகும் குற்றம். எண்ணங்கள் அங்கும் இங்கும் அலை பாய்வதால் வேலையில் கவனம் இல்லாது போய் இறுதியில் சோர்வடைந்து நிற்கிறோம். மனம் சிதறிப் போவதே இதற்குக் காரணம். இது மனத்தின் பலவீனத்தைக் குறிக்கிறது. ஆகவே எண்ண வலையிலிருந்து விடு பட்டு ஓய்வாக, ஆனால் கவனமாக இருக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். இந்தச் சிக்கலைச் சமா ளிக்க நேரிடையான வழி ஆத்ம விசாரமே.

பாதையில் இருக்கும் அடுத்தத் தடை, பயனை எதிர் பார்த்து நிற்கும். மனத்தின் தன்மையே, நாம் தாம் செயல்களைச் செய்து பயன்களை அனுபவிக்கி றோம் என்பது. முயற்சி கட்டாயம் தேவைதான்.

ஆனால் செய்யும் வேலை விரும்பும் பயனைத் தரும் என்ற கட்டாயமில்லை. மேலும் நாம் செய்யும் முயற்சி பெரும்பாலும் போதுமானதாக இருப்பதில்லை, ஆனால் இலக்கை அடையவேண்டும் என்ற விருப் பமோ வலுவாக உள்ளது. எனவே தான் நாம் கவ லைப்படுகிறோம். வாழ்க்கையில் அனுபவம் தரும் அடிகள், செயலின் விளைவுகள் தெய்வீகத்தால் நிய மிக்கப்படுகின்றன என்ற உண்மையை அறிவுறுத்து கின்றன. ஆன்மீக சாதனையிலும் விளைவை விரும் பும் மனத்தின் இந்தப் பாங்கினை உயர்ந்த நிலையில் காண்கிறோம். நமக்காக குருவே எல்லா வேலைகளும் செய்து நமக்கு ஆத்ம ஞானம் தர வேண்டும் என்று எதிர்பார்க்கிறோம். முன்னேற்றம் இல்லாதபோது வருந்துகிறோம். ரங்கனிடம் ஒரு சம யம் ரமணர் சொன்னார், 'சிலர் வந்தவுடன் ஞானி யாக விரும்புகிறார்கள்'. ஆனால் அதில் உள்ள முயற்சியை ஒதுக்கி விடுகிறார்கள் பயனை எதிர் நோக்கும் பழக்கத்தை நாம் விட்டுவிடவேண்டும். காட்சிகள், கனவுகள், சித்திகள் அல்லது வேறு எந்த அளவு கோலாகவும் அது இருக்கலாம். ரமணரின் வலிமையை பற்றிக்கொள்ள நாம் படிப்படியாகக் கற்றுகொள்ள வேண்டும். இல்லையேல் வேலையில் தியானமும் கடினமாகத் தெரியும். சாந்தியளிக்கும் தியான அலைகள் வேலையில் பாயமாட்டா. உள்நோக்கும் மனமுடைய சாதகர்க்கு நேரம் என்பது வேலையிலோ அல்லது தியானத்திலோ செலவழிக் கப்படுகிறது. இரண்டையும் குழப்பக் கூடாது. கவ னமாக இல்லாவிட்டால் நம் இயல்பாம் மகிழ்ச்சியை விட்டு நீங்கி நாம் வாழ்வை நகர்த்திச் செல்ல நேரிடும்.

* * * *

# வாழ்க்கை எதற்காக?

பக்தர்: வாழ்கையின் நோக்கம் என்ன?

பகவான்: வாழ்க்கையின் நோக்கத்தை அறிய முற்படுவதே முந்தைய பிறவிகளில் செய்த நல்வினைகளின் பயன் ஆகும். அத்தகைய அறிவை அடையாதவர்கள் வாழ்க்கையை வீணடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

டாக்ஸ். 558 ப. 519

வாழ்வின் பொருளைக் கண்டுபிடிக்க வேண்டிய தன் இன்றியமையாமையை ரமணர் நேரடியாகவே கேட்பவரின் கவனத்திற்குக் கொண்டு வருகிறார். நாம் ஒவ்வொருவரும் அதனை நாமே தேடிக் கண்டு பிடிக்க வேண்டும். அனுபவம் என்பது தனிமனிதனைப் பொறுத்தது. மற்றவர் கூறும் விளக்கங்களெல்லாம் வெறும் செவிவழிசெய்தியே. பெரும்பான்மையான மக்கள் தங்கள், வேலைகளிலும், உறவினர்களோடும், நண்பர்களோடும், கேளிக்கைகளிலும் காலத்தைக் கழிக்கிறார்கள் அவர்கள் பாக்கியமற்றவர்கள். அவர்கள் வாழ்க்கை வீணாகிப்போகிறது. மேலாக நோக்கும் போது வாழ்வில் ஒரு நிகழ்ச்சிகூட அவர்களைப் பாதிக்கவில்லை. வாழ்வு வீணாகிப்போனதை அறிய அவர்களுக்கு வாய்ப்பே எழவில்லை. பொதுவாக துயரம்தான் ஒரு மனிதனை மிகவும் பாதித்து வாழ்வின் கற்பனைகளைக் குறித்து கேள்வி கேட்கச் செய்கிறது. கணவனின் சாவு, குழந்தைகளின் சாவு எனத் தொடர்ச்சியாக நிகழ்ந்த துன்பங்கள் எச்சம்மாள் இதயத்தைப் பிழிந்து அவளை ரமணரிடம் கொண்டுச் சேர்த்தன. தன் பிள்ளையை

யும் பெண்ணையும் இழந்த இரட்டைச் சோகத்தால் பாதிக்கப்பட்ட நரசிம்மசாமி துறவு மேற்கொண்டு ரமணரிடம் வந்தார். அதுபோல பகவானது டாக்ஸ்களை பதிவு செய்த முனகல வெங்கட்ராமய்யா, வாழ்வின் இக்கட்டான நிலையில் ரமணரிடம் வந்தார். சுப்பராமய்யா, தன் இளம் குழந்தை இறந்த போது ரமணரிடம் 'அறுதலும் அறிவுரையும் வேண்டி நின்றார். துயரம் வரும்போது நாம் பெரிதும் மதிப்பவற்றை கேள்வி கேட்கிறோம். துன்ப காலங்களில் செய்யப்படும் பிரார்த்தனைகள் கூட மிகவும் உருக்கமானவையாக அமைகின்றன. ஆனால் துயரம் வந்து நம் வாழ்வின் நோக்கத்தை மாற்றும் வரை நாம் காத்திருக்க வேண்டுமா என்பது குறித்துச் சற்றே சிந்திக்க வேண்டும். நாம் இறுதிநாள் வரை காத்திருக்க வேண்டுமா என்ன?

காலம் காத்திருப்பதில்லை. அது கருணையில்லாமல் நகர்ந்து செல்கிறது. வாழ்வு என்பது நாம் பிறக்கும் போதே நிச்சயிக்கப்படுகிறது. அது கர்மத்தின் விளைவு. உடல் என்பது சில அனுபவங்களை அனுபவித்துத்தான் ஆக வேண்டும். அது முடிந்த பின்னர் சாவு நிகழ்கிறது. ஞானிகளுக்கு மட்டும்தான் சாவு என்பது அவர்கள் விரும்பும் போதுதான் நிகழும். அவர்களுக்கு உடல் என்பது மனித சமுதாயத்தின் நன்மைக்காகவே ஒழிய கர்மவிளைவுக்காக அல்ல. மற்றவர்களுக்கெல்லாம் கர்மம் முடிந்தவுடன் வாழ்க்கையும் முடிந்து விடுகிறது. மிகச் சில பேருக்கு மட்டும் விதிவிலக்காகச் சத்குருவின் அருளால் வாழ்க்கை நீட்டிக்கப் படுகிறது. ஜகதீஸ்வர சாஸ்திரி ரமணரிடம் வேண்டி பெரிய நோயிலிருந்து தப்பித்தார். ரமணர் சன்னிதியில் இருந்து கொண்டு, ரங்க

ஐயர் வித்யை வென்றார். சிலசமயம் பக்தருக்குத் தெரியாமலேயே ரமணரின் அருள் அவர்கள் வாழ்க்கையை நீட்டிப்பது உண்டு. எல்லாம் வல்ல குருவினால் எதுவும் சாத்தியமாகும் என்று ரமணர் பரோடா ராணியிடம் கூறினார். இருப்பினும் இவை எல்லாம் குருவிடம் கொள்ளும் சரணாகதியைப் பொறுத்தது என்பதை நினைவில் கொள்ள வேண்டும். விதிவிலக்குகளை விதிவிலக்குகளாகவே கொள்ள வேண்டும். சாவு என்பது எப்போது வேண்டுமானாலும் வரலாம். செயலாற்றும் வினைச் சக்தி எப்பொழுது முடியும் என்பது நமக்குத் தெரியாது, எனவே மரணத்திற்கு நாம் தயாராகத்தான் இருக்க வேண்டும்.

எதற்காகத் தயாராவது என்பது அடுத்தக் கேள்வி. வாழ்வின் நோக்கத்தை அதன் ஆழ்ந்த நிலைக்குச் சென்று கண்டுபிடிக்க வேண்டும். அதனால் தான் வாழ்வின் நோக்கத்தைக் கண்டு பிடிக்க வேண்டும் என்ற விருப்பம் கூட இறந்தகால நல்வினையால் அமைவது என்று கூறுகிறார் ரமணர். அது இவ்வளவு முக்கியமானது. இங்கு இறந்த காலம் என்பது உடல் எடுப்பதற்கு முன்னால் உள்ள வினைகள் மட்டுமன்றி உடலெடுத்தப்பின் இந்த கேள்வி கேட்கின்ற வரை அமையும் காலத்தையும் குறிக்கும்.

நல்ல கர்மம் என்று ரமணர் பயன்படுத்துவதைக் குறித்து நாம் சிந்திக்கவேண்டும். சமுதாய நன்மைக்காகச் செய்யப்படும் செயல்கள் பொதுவாக நல்லவை என்று கருதப்படுகின்றன. இதை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் பேர், புகழ்

ஆகியவற்றை அடைய நமக்குள்ளே திருட்டுத்தன மாக நுழையும் விருப்பம் தான் சிக்கலை உருவாக்கு கிறது. ஆகவே ஒரு செயலைச் செய்யும் பொழுது உண்டாகும் மனநிலையை பரிசோதிக்க வேண்டும். செயலை நல்லது தீயது என்று பாகுபடுத்துவது மனமே. கெட்ட செயல் என்பது நம்மை மேலும் மேலும் உறவுகளில் பந்தப்படுத்துவது. அது தன்னல வாழ்வை அதிகப்படுத்தும். ஆனால் நல்ல செயல் என்பவை தெய்வீகத் தொடர்பு உடையனவாய் நம்மை உள்நோக்கிச் செலுத்தும். உபதேச சாரத்தில் இரண்டாவது, மூன்றாவது பாடல்களில் ரமணர் இந்த வேறுபாட்டை எடுத்துரைக்கிறார். கர்மம் என்பது நம்மை மேலும் மேலும் வாழ்வைக் குறித்து சிந்திக்க முடியாதபடி செய்யும். கடவுளுக்கு அர்ப்ப ணிக்கப்படும் செயல்கள் நம்மை கர்மம் என்னும் காட்டிலிருந்து விடுவித்து விடும். எனவே நாம் செயல்களைச் செய்யும் கர்த்தா என்று நினைத்தால் அதன் விளைவு அறியாமையே. நாம் செய்கிறோம் என்ற எண்ணத்தை விட்டுவிட வேண்டும். இதைச் செய்ய நல்ல வினைகள் தேவை.

ஆகவே நல்வினை என்பது ஒரு வெற்றிடத் துடைப்பான். அது மனத்திலுள்ள எதிர்மறை, சுயநல எண்ணங்களை உறிஞ்சி விடும். தூய்மையடைந்த மனம் ஆத்ம ஞானத்தைப் பெற விசார வழியில் உதவி செய்கிறது. மனம் உள்நோக்கித் திரும் பினாலேயே பாதி வேலை முடிந்து விட்டது என்று பொருள். அலையும் மனத்தோடு அலைந்துத் திரி யாமல் வாழ்வின் நோக்கத்தை விசாரித்து அறிய வேண்டும். 'நான்' என்பதின் மீது தொடர்ந்து செலுத்தப்படும் கவனம் உள்நோக்கித் திரும்பிய

மனத்தை மூலத்தில் இருக்குமாறு செய்கிறது. அப்போதுதான் வாழ்க்கை வரம் பெற்றதாக ஆகிறது. நல்ல வினையால் தொடங்கப் பட்டு ஆத்ம விசாரத்தால் வளர்க்கப்படும் அகச்செயல் தொடர்ந்து நடைபெறுமானால், 'நான் இத் தொழிலைச் செய்கிறேன்' என்ற எண்ணம் அழிந்து போகும். இருப்பினும் முழுமை விளங்கித் தோன்றும்.

* * * *

# மனத்தின் மயக்குகள்

சக்திகள் இல்லாதவர்களுக்கு அவை ஆச்சரியத் தைத் தந்தாலும் அவை நிலையற்றவை. அவை குறித்து விரும்புவது பயனற்றது. இந்த ஆச்சரியங் கள் எல்லாமே மாற்றம் இல்லாத ஒரே ஆத்மாவில் அடங்கும்.

– டாக்ஸ் 616 ப. 578

மகரிஷியிடம் வந்த முதல் மேலைநாட்டவராகிய ஹம்ஃப்ரீஸ், 'கிருஷ்ணரையும் யேசுவையும் போல என்னால் சித்திகள் செய்ய முடியுமா?' என்று கேட்டார். ஆக்ஸ்போர்டிலிருந்து வந்த இவான்ஸ் வென்ட்ஸ் என்பவர், 'சித்திகள் படைத்த யோகிகள் இருக்கிறார்கள். மகரிஷி அதுபற்றி என்ன நினைக்கிறார்?' என்று கேட்டார். சித்திகள் அடைவது நல்லதில்லையா? கண்ணுக்குத் தெரியாமல் இருப்பது ஞானத்தின் அறிகுறி இல்லையா? தன்னை உணர்தல் என்பது சித்திகளைக் குறிக்குமா? தம்முடைய முந்தை யப் பிறவிகளை லிட்பீட்டர் எடுத்துரைக்கிறார். அத்த கைய சக்திகள் பயனளிக்குமா?

ஞானிக்கு சாந்தி மட்டும் தான் உண்டா அல்லது சக்திகளும் உண்டா? தவத்தின் வலிமையால் நாம் உலகத்தைப் புதுப்பிக்க முடியுமா? ஆன்மீகப் பயிற் சியின் மூலம் மேலும் சக்திகள் அடைவது பற்றி இவையெல்லாம் சில கேள்விகள். சக்தியைக் குறித்து ஆசைப்படும் அளவிற்கு நாம் சாந்தியையும் மகிழ்ச்சியையும் பற்றி கவலைப் படுகிறோமா என்ற ஆச்சரியம் சில சமயங்களில் உண்டாகிறது. இயற்கை இறந்த சக்திகள் எப்பொழுதுமே நம்மை ஆச்சரியம்

படுத்தும். அவை மனத்தில் ஒளிவிட்டு அத்தகைய சக்திகளை வழிபடச் செய்யும்.

இருப்பினும் உண்மையை நாடுபவர் சித்திகளால் கவரப்படக் கூடாது; அவற்றின் பயனை ஆய்ந்து அறிய வேண்டும். சில அடிப்படைக் கேள்விகளை நம்மிடமே நாம் கேட்கவேண்டும். நான் ஏன் ஒரு சாதாகனாக இருக்கிறேன்? நான் எதை நாடுகிறேன்? ஆத்ம ஞானமா? சித்திகள் தெய்வீகத்தோடு நம்மை தொடர்பு படுத்துமா? சித்திப் பாதை என்பது ஒரு சந்தா அல்லது அரசவழியா? அவை நம்மை உண்மையைத் தேடுவதிலிருந்து விலக்குமா அல்லது ஆன்மீகப் பயிற்சியில் துணைபுரியுமா? இந்த கேள்விகளை ஆரம்பத்தில் கேட்பது மட்டும் முக்கியமன்று; ஆன்மீக முயற்சியின் நோக்கத்தினை நினைவுகொள்ளுதல் வேண்டும். இலக்கை விட்டுவிட்டால் நோக்கம் நிறைவேறாது போனால் ஆன்மீகப் பயிற்சி பயன் தராது வீணாகிப் போகும்.

இதனால்தான் ரமணர் சித்திகள் அடைவதை ஆதரிப்பதில்லை. பழைய பிறவிகளை காணுதல் பற்றி அவர் கூறுவார், அது அன்றாட வாழ்க்கையில் என்ன பயனைத்தரும்? இவையெல்லாம் உடலின் பிறப்புகளே. அத்தகைய அறிவு நமக்கு மகிழ்ச்சியோ அறிவோ தராது. ஆகவே அதனை விரும்பத் தேவையில்லை. உற்று நோக்கினால் இப்பிறவியிலேயே இறந்தகால நினைவுகள் நமக்கு நிறைய தொல்லை தருகின்றன. அவற்றை நம்மால் தள்ள முடியாது. பின் நினைவுச் சுமைகளை ஏன் மேலும் ஏற்ற வேண்டும்.' அது போலவே தூரதரிசனம் பற்றியும் அன்றாட வாழ்வில் அதனது பயனைப் பற்றி ரமணர் கூறு

வார். நம்முடைய பார்வை தூரமோ அருகிலோ இருப்பதால் என்ன பயன்? காட்சி என்பது காண்ப வருக்கே. காண்பவர் யார் என்று நாம் கண்டுபிடிக்க வேண்டாமா? சென்னையில் இருந்த ஒரு யோகி இமய மலையில் இருக்கும் தன் குருவோடு தொடர்பு கொள்வதாகப் பால்பிரண்டன் கூறியிருக்கிறார். அதுபற்றி ஒருவர் கூறிய போது அந்த யோகி தனது கேட்கும் சக்தியை அதிகப்படுத்தியிருக்கிறார் என்றார் ரமணர். ஆனால் கேட்டல் என்பது ஓர் எழுவாயைப் பற்றி நிற்கிறது. எழுவாயைப் பற்றிய அறிவே அடிப்படை அறிவு. அதைப் பற்றிய உண்மையை நாம் அறிய வேண்டும். அசாதாரண மனிதனின் சக்தியைப் பற்றி ஒருவர் கேட்டபோது ரமணர் கூறினார், 'அந்த ஆற்றல்கள் உயர்ந்த வையோ அல்லது தாழ்ந்தவையோ அந்த மனம் சாதாரண மனமோ உயர்ந்த மனமோ ஆக இருக் கட்டும். அச்சக்திகளை உடையவன் யார் என்று கண்டுபிடியுங்கள்'.

இச் சக்திகளின் குறை பாட்டையும் அவர் எடுத் துரைப்பார். இறுதியில் எல்லா முயற்சியுமே நம்மு டைய இயல்பான மகிழ்ச்சியைக் குறித்த விழிப்பு ணர்வாக ஆக வேண்டும். கடுமையான பயிற்சியின் மூலம் சில சித்திகளைப் பெறலாம். அவற்றை அடைந்த பின்னர் பிறருக்கு எடுத்துக் காட்டி பாராட்டைப் பெறவே முயல்லோம். சித்திகள் உலகி லும் போட்டிகள் உண்டு. சிலர் அதிக சித்திகள் பெற்றிருப்பர். மக்கள் கூட்டம் அவர்களைச் சூழ்ந்து கொள்ளும். இதனால் பொறாமை உண்டாகும். அதில் படிநிலைகளும் உண்டு. மேலும் நம்மை அறி யாமலேயே பேரும் புகழும் பெற முயற்சிப்போம். பல

புதிய சக்திகள் தோன்றுவதால் பழையவை இழ
போவதும் உண்டு. பின்னர் இதில் மகிழ்ச்சி எ
யிருக்கும்?

நாம் தியானத்திற்கு எடுத்துக்கொ
சிந்தனையில் சித்தியை நாடுபவர் அனித்திய ல
திற்காக நித்திய மகிழ்ச்சியை இழக்க வில்லை
என்று கேட்கிறார். பயிற்சிகள் சரியாக இல்ல
போனால் பெற்ற சித்திகளை இழக்க நேரிட
பயிற்சியில் தோய்வு ஏற்பட்டால் சக்திகளை இழ
நேரிடும்.

எனவே சாதகர்கள் சித்திகளை விட்டுவி
உண்மையை நாட வேண்டும். கேளாமலேயே
சித்திகள் வந்து சேருகின்றனவே என்று கேட்கல
இந்நிலையில் நாம் சந்தியில் நிற்கிறோம். சித்திகளை
பெற்றால் கீழே இறங்கி விடுவோம். வீரமுடைய
கள் அவற்றைவிட்டு ஒதுக்கிவிட்டு ஆத்ம ஞான
இலக்காக முன்னேறுகின்றனர்.

சித்திகள் எல்லாமே மனத்தின் விளிம்பிற
உட்பட்டவை. மனத்தின் சக்திகளை ஒரு குறிப்பிட
வழியில் செலுத்துவதே சித்தி. இங்கு நாம் விழ
பாக இருக்க வேண்டும்.

ஞானிகள், முனிவர்கள், பக்தர்கள் ஆகியோ
டத்து இயற்கையாகவே விளங்கும் சக்திகள் வே
வகைப்பட்டவை. ஏன்? அவர்களுக்கு சங்கற்ப
என்பதே இல்லை. பரம் பொருளைச் சரணடைந
அவர்களது மனம் ஆன்மீக இதயத்தில் நிலைத்
நிற்கிறது. அவர்களது மனம் விருப்பு வெறுப்
அற்றவை. அவர்கள் மனத்தை சித்திகளுக்கா

பயன் படுத்துவதில்லை. ஆனாலும் அவர்கள் ஆச்சரியங்களை நிகழ்த்துகிறார்கள். ரமணருடைய உடல் விருபாட்ச குகையிலிருந்து விண்வெளியில் புறப்பட்டு திருவொற்றியூரில் தவம் செய்யும் கணபதி முனியை அடைந்தது. இந்த நிகழ்ச்சியை நரசிம்ம ஸ்வாமி நன்கு விளக்குகிறார். ரமணர் முனி வரை ஆசிர்வதித்துவிட்டு திரும்பிவிட்டார். ரமணர் இச்செயலை விரும்பிச் செய்யவில்லை. தெய்வீக சக்திகளின் தூய வழியாக அவர் விளங்குவதால் அது தானாகவே நிகழ்ந்தது. ஞானிகளின் சக்தி என்பது அவர்கள் மூலம் வேலை செய்யும் ஆத்ம சக்தியே. அவர்கள் அச்சக்திகளை முயற்சியின்றியே விளையாட்டாகச் செய்கிறார்கள். அவர்களது அத்த கைய செயல்கள் உண்மையிலேயே அற்புதமா னவை. ஏனெனில் அவை தாமாகவே நிகழ்வன. மேலும் அவை எல்லையற்றவை. ஆம் அதுவே ஆத்ம சித்தியாம் உண்மைச் சித்தி.

* * * *

# பயணியின் முன்னேற்றம்

*'கல்கத்தாவிலிருந்து சென்னைக்கு வரும்போது அறிவிப்பு பலகைகளும் கால அட்டவணையும் எனக்கு வழிகாட்டுகின்றன. ஆனால் ஆத்ம விசாரத்தில் எனக்கு வழிகாட்டுவது யார்?'*

*- டாக்ஸ் 427 ப. 395*

நாம் முன்னேற்றமடைகிறோமா? அப்படியானால் இலக்கை அடைய எவ்வளவு நேரமாகும்? இவை போன்ற கேள்விகள் மனத்தில் அவ்வப்போது எழும். இவற்றின் அவசரம் நாம் எந்த அளவிற்கு ஆத்ம ஞானத்தை விரும்புகிறோம் என்பதைப் பொறுத்தது. ஆனால் ஒவ்வொருவரும் ஆன்மீகப் பாதையில் தாம் எந்த அளவுக்கு முன்னேறியிருக்கிறோம் என்று அறிய ஆசைப் படுகிறோம். மற்ற செயல்களைப் பொறுத்த வரையில் அவற்றை அளக்க நிச்சயமான அளவு கோல்கள் உண்டு. அவற்றில் உண்டாகும் முன்னேற்றம் மேலும் முயற்சி செய்து இலக்கை அடைய உதவுகிறது.

ஆனால் உண்மையைத் தேடிச் செல்லும் அகப் பயணத்தில் இது போன்று குறிப்பிட்டுச் சொல்லும் அளவைகள் ஏதும் இல்லை. தொடக்கத்தில் எப்படியிருக்கிறது? நன்கு முன்னேறுகிறோமா? இலக்கின் அருகே வந்து விட்டோமா? இப்படி முன்னேற்றத்தை உடனே அளந்தறிய முடியாது. அறிவிப்பு பலகைகளோ, கால அட்டவணைகளோ ஏதும் இங்கு இல்லை. மேலும் சொல்லப் போனால் ஒரு வகையில் பயணம் என்பதே இல்லை. ஏனெனில் நாம் முடி

விலேயே இருக்கிறோம். இது புதிரில்லை, அப்பட்ட மான உண்மை. ஏன்? தேடும் ஆத்மாவிலிருந்து நாம் வேறு பட்டவர்கள் இல்லை. அதிலிருந்து நீண்ட தூரம் விலகி நிற்பதும் இல்லை. முழுமை உணர் வாம் ஆத்ம ஒளியால் மனம் சக்திப் பெறுகிறது, செயல்கள் நடக்கின்றன. நாம் வாழும் உலகம் தவறான கோட்பாடுகளைக் கொண்டது. அவற்றிலி ருந்து நகர்ந்து, மனத்தின் பிடியிலிருந்து விடுபட்டு, நம்முடைய இயல்பைக் கண்டறிய வேண்டும்.

எனவே ஆன்மீகப் பயணம் என்பது ஓர் அவிழ்ப்பு; தடைகளை நீக்கி உள்ளே இருக்கும் அக வலிமையைக் கண்டறிதல். அப்பொழுது சாதனைக் காலத்தில் நம்மை நாம் சோதித்துக் கொள்ள சோதனை எதுவுமேயில்லையா என்ற கேள்வி எழும். விழிப்பாக இருந்தால் நமக்குள் இருக்கும் மாற்றத்தை உணரலாம். 'பனி வெண்மை' என்ற கதை யில் வரும் கண்ணாடியைப் போல், உண்மையைப் பேசும் ஒரு கண்ணாடி உண்டு. அதாவது நம் எண்ணங்களும் செயல்களும் ஆகிய கண்ணாடி. நாம் அவற்றைப் பதிவு செய்துகொள்ள வேண்டும். நாம் இவற்றை கவனித்துத் தான் ஆக வேண்டும். இல்லையேல் நாம் இகபரசுகம் இரண்டையும் இழந்து விடுவோம்.

தொடக்கத்தில் பலவீனமான மனம் என்ற சிக்கல் எழுகிறது. தியானம் என்பது குருக்ஷேத்திர சண்டையாகிறது. ஆனால் தொடர்ந்து செய்தால் மனம் ஒரே எண்ணத்தோடு நிற்கும் வலிமையைப் பெறுகிறது. ரமணர் குறிப்பிடுகிறார். 'தேவையில் லாத எண்ணங்களிலிருந்து எந்த அளவிற்கு

விடுதலை பெறுகிறோமோ, ஒரே எண்ணத்தில் எந்த அளவிற்கு நிலைத்து நிற்கிறோமோ, இவைதாம் நம் முன்னேற்றத்தை அளப்பவை. மனத்தைச் சேர்த்துப் பிடிக்கும் தன்மையில்தான் வெற்றி நிகழ்கிறது. தியானத்தில் கிடைக்கும் அமைதி என்பது அந்த நேரத்தில் மட்டும் அமைவதில்லை. எந்தச் செயலை செய்யும் பொழுதும் அது அடிநாதமாக விளங்குகிறது.

ஆன்மீகப் பயிற்சியில் வெற்றியைத்தரும் இரண்டாவது அறிகுறி இது. மனம் வெற்றியையும் தோல்வியையும் ஒரே மாதிரி கருதும் நடுநிலைமையைப் பெறுகிறது. தோல்வி கலவாத வெற்றி என்பதே இல்லை. தோல்வியும் ஏமாற்றமும் வரும் போதுதான், சேர்த்து வைக்கும் மனத்தின் சக்தியைக் காணமுடிகிறது. ரமணர் ஹம்ஃப்ரீஸிடம் சொன்னது போல விளைவுகள், 'மன அமைதி, துன்பங்களைச் சமாளிக்கும் ஆற்றல் என்று எல்லாவழிகளிலும் தங்களைத் தாமே வெளிப்படுத்திக் கொள்ளும்.

ஆத்ம விசாரத்தால் வைராக்கியம் தானாகவே உண்டாகும். உலக சுகங்களில் உண்டாகும் வெறுப்பு என்பது தோல்வியால் ஏற்படும் எதிர்மறை நோக்கு அன்று. உயர்ந்த மகிழ்ச்சியை அடைவதற்காக உண்டாகும் நேரிடை நோக்கு அது. ஆத்ம சுகத்தைப் பற்றிய விழிப்புணர்வு வரை ஆரம்பிக்கிறது. நம்முடைய மதிப்புகளை எடைபோடும் தன்மை மாறிவிடுகிறது. உள்நோக்கிச் செல்ல முயற்சி செய்யப்படுகிறது. இயல்பான சுகம் அனுபவிக்கப் படுகிறது.

நம்பிக்கையின்மை, நம்மை நாமே மதிப்பீடு செய்தல் ஆகியவை கூடாது. ஒரு நிமிஷத்தில்

செய்யப்படும் ஒரு தனி முயற்சி கூட உரிய காலத்தில் பயன்தரும் என்று கூறியிருக்கிறார் ரமணர். இதைவிட வேறு என்ன உறுதி வேண்டும். ரங்கனோடு ரமணர் கொண்ட உரையாடல் தெம்பளிப்பதாக இருக்கிறது. ரமணரோடு மிக நெருக்கமாக இருந்தபோதிலும் தம்முடைய அகந்தை குறைந்தபாடில்லையே என்று மிகவும் வருந்தினார் ரங்கர். ரமணர் அவரிடம் கூறினார், ‘அகந்தை போக வேண்டுமானால் உள்ளிருப்பவை எல்லாம் வெளியே வரவேண்டும். கொதிப்பதற்காக தண்ணீர் அடுப்பின் மீது வைக்கப் படும் போது அது கொதித்துச் சிதறுவதில்லையா?’

பயணிக்கும் போது உண்மையான முன்னேற்றத்தை நாமே உணரலாம். ‘கைப்புண்ணைக் காண்பதற்குக் கண்ணாடி எதற்கு’? அது தானாகவே வெளிப்படும். அதுபோல நமக்குள் எழும் ஆன்மீக முன்னேற்றத்தை உறுதிப் படுத்தவோ அல்லது மறுக்கவோ வேறொருவர் தேவையில்லை. அதன் அழகு ஓராயிரம் வழிகளில் மலர்ச்சிக் கொள்ளும்.

* * * *

## நாம் பிரார்த்தனை செய்ய வேண்

டாக்டர் சையத்: ஒருவர் ஆன்மீக நன் இரண்டாண்டுகள் கொள்கிறார் என்று கொள்வோம். பலன் காது போனால் அ செய்ய வேண்டும்?

பகவான்: அவருடைய நன்மைக்காகவே வேண்டு கோள் நிறைவேற்ற இருக்கலாம்.

பக்தர்: துதிசெய்யும் நம் வேண்டு நிறைவேறுகின்றனவா?

பகவான்: ஆம், அவை நிறைவேறுகின்ற எண்ணமும் வீணாவதில்லை. ஒ எண்ணமும் அதன் விளைவை கும். எண்ணங்களின் சக்தி ஒ தும் வீணாகமாட்டா.

டே பை டே ப

நாம் வேண்டிகொள்ளத்தான் வே எல்லாம் வல்ல கடவுளுக்கு நம் தேவை யாதா? உயர் சக்திக்கு நம்முடைய தேவை விருப்பங்களையும் சொல்லித்தான் ஆக வே என்ன? நம்முடைய விருப்பங்கள் அந்தச் ஏற்கெனவே தெரிந்திருக்கும் என்று நி என்ன தவறு? சத்குருவிடம் ஆன்ம வெ வேண்டாமல் உலகியல் தேவைகளை வே

வெட்கத்திற்குரியது இல்லையா? நம்முடைய வேண்டுதல்கள் எல்லாம் நிறைவேற்றப் படுகின்றனவா? இல்லை என்றால் ஏன்? அன்றாடம் நிகழும் சாதனையில் எழும் சந்தேகங்கள் இவை.

வாழ்வில் சில சூழ்நிலைகளில் நாம் துணையில்லாமல் தவிக்கும் போது பரம்பொருளின் உதவியை நாடுகிறோம். அப்பொழுது வேண்டுகோள் நிகழ்கிறது. மிக உயர்ந்த நிலையில் வேண்டுகோள் என்பது கடவுளிடமோ, சத்குருவிடமோ முழுமையாகச் செய்து கொள்ளும் சரணாகதி ஆகும். கர்த்திருத்வம் அழிந்தால் தான் அத்தகைய சரணகதி சாத்தியமாகும். அப்போது செயல்களும் அவற்றின் பயன்களும் தெய்வீகத்தால் ஒழுங்குப் படுத்தப்படுகின்றன என்ற உண்மை புலனாகிறது. அத்தகைய சரணாகதி இருந்தால் தனிமனித வேண்டுகோள் என்ற பேச்சே எழாது. நாம் கடவுளின் கருவியாகிறோம். அப்பொழுது வாழ்வில் நம் புலனுக்கு நன்மையாகவோ அல்லது தீமையாகவோ தோன்றுவதை எல்லாம் ஏற்றுக் கொள்கிறோம்.

இருப்பினும் குருவிடம் எல்லாவற்றையும் ஒப்படைக்கும் பக்குவம் எல்லோருக்கும் இருப்பதில்லை. நம்பிக்கையிலும், சிரத்தையிலும் தான், நம் வலிமையும் சரி, மெலிவும் சரி அமைந்திருக்கின்றன. ஆனால் நம்மை குழப்புவதற்காகவே நமக்குத் தெரியாமல் நம்முடைய விதி நின்று கொண்டிருக்கிறது. அப்போது நாம் சத்குருவின் உதவியை நாடுகிறோம். இவ்வாறு வேண்டுகோள் என்பது இயல்பானதும் தவிர்க்க முடியாததுமாக ஆகிறது. நம்மை நாம் முழுமையாக

உணராததால் தினந்தோறும் தொடர்ந்து வேண்டிகொள்கிறோம். கடவுளிடம் ஒரு பெரிய மளிகைக்கடைப் பட்டியலையேத் தருகிறோம். எல்லா பக்தர்களும், ஏன் பழைய பக்தர்களும் கூட இதற்கு விதிவிலக்கு இல்லை. அவர்கள் எல்லோருமே தங்கள் வேண்டுதல்களை வெளிப்படையாகவே சொல்லுகிறார்கள். தாங்கமுடியாத வயிற்று வலியினால் தவித்த மணவாசி ராமசாமி ஐயர் தம் நோயை நீக்க ரமணரை வேண்டிக் கொள்கிறார். நோய் நீங்கிய பின்னர் ரமணர் அவரை ஆன்மீக வழியில் செலுத்த முயற்சித்தார். தேவராஜ முதலியார் தன்னுடைய சிறிய குறையைக் கூட ரமணரிடம் கூறுவார். அது ஒரு குழந்தைத் தன் பெற்றோரிடம் கூறுவதைப் போன்றது. ரமணரிடம் பிரச்சினைகளை கொண்டு வந்தாலே அவை தீர்ந்து போகும் என்று முதலியார் நிச்சயமாக நம்பினார். குழந்தைகள் திருமணத்திற்கும் மகப்பேறு உண்டாவதற்கும் ரமணரிடம் வேண்டியவர் பலர். பக்தர்களின் விருப்பங்களை ஈடேற்றுவதில் ரமணர் காமதேனுவாக திகழ்ந்தார். அத்தகைய வேண்டுகோள்களை அவர் ஒருபோதும் புறக்கணித்தது இல்லை. ஆனால் அவர்களுக்கு உதவி தம்மிடமிருந்து வந்தது என்பதை மட்டும் அவர் ஒப்புக்கொள்ள மாட்டார். ஆகவே ரமணரிடம் நம்முடைய தேவைகளை வலியுறுத்திச் சொல்வது நியாயமே. அதில் குற்றம் ஒன்றும் இல்லை.

சரி, ஆனால் நிறைவேறாத வேண்டு கோள்களைப் பற்றி என்ன சொல்லுவது? நிறைவேறாத வேண்டுகோள் என்பதே ஒரு வரம் என்கிறார் ரமணர். நம்முடைய பார்வை குறுகிய

தூரமே செல்லும். வினைகளைப் பற்றி நமக்குத் தெரியாது. செயல்கள் நிகழ்ந்த பின்னர் தான் அவற்றின் குறைபாடு நமக்குப் புரிகிறது. சுந்தரமூர்த்தி நாயனார் வாழ்க்கையில் இதுபோல பல நிகழ்ச்சிகள் உண்டு. நாயனார் தாமாக வருவித்துக் கொண்ட தொல்லைகளிலிருந்து இறைவன் அவரைக் காப்பாற்றியிருக்கிறார்.

இக்கருத்து உலகியல் நிகழ்ச்சிகளுக்கு மட்டுமே பொருந்தும் என்று நினைக்க வேண்டாம். ஆன்மீக சாதனையில் கூட நம் விருப்பம் நிறைவேறாமல் போவது, நமது நன்மைக்காகவே கூட இருக்கலாம். ஆன்மீக முன்னேற்றத்திற்காக நாம் வைக்கும். வேண்டுகோள்கள் நிறைவேறாமல் போகலாம். ஏனெனில் அப்பொழுது நமக்குள்ள வேகம் நமக்கே பாதகமாக அமையலாம்.

வேண்டுகோள் என்பது நம்முடைய விருப்பங்களின் ஒருமித்த வடிவமாகத் திகழ்கிறது. தண்ணீர் ஐஸ்கட்டியாக ஆவதைப் போன்றது அது. எண்ணங்களுக்கு என்றுமே சக்தி உண்டு. ஏனெனில் அவை இதயத்திலிருந்து எழுகின்றன. தொடர்ந்த கவனத்தால் விருப்பம் ஈடேறும். அனுபவத்தைத் தரும் சக்தி அது. ஆனால் அத்மாவில் நிலைத்திருந்தால் வேண்டுகோள் நிறைவேறுதல் பற்றிய எண்ணமே உண்டாவதில்லை காரணம் தனித்தன்மை முடிந்து போவதே. வேண்டுகோளால் நாம் பாதிக்கப்படுவதும் இல்லை. ஆனால் அகந்தை இருக்கும் வரை வேண்டுகோள் என்பதும் இருந்து கொண்டுதான் இருக்கும். அதுவும் ஒரு எண்ணம்தானே. ஆனால் வினைமுதிர்ச்சியால்

அதுகூட வேண்டத்தகாத விளைவுகளை உருவாக்கலாம். ஆகவே வேண்டுகோளைக் குறித்து கவனமாக இருக்க வேண்டும். அதன் நெறி முறைகளைக் கவனமாக கைக்கொள்ள வேண்டும். இல்லையேல் அவை நம்மையே பாதித்துவிடும். நல்ல வேண்டுகோள் என்பது சத்குருவிடம் சென்று சாந்திமிக்க சூழ்நிலையை உருவாக்கப் பிரார்த்திப்பதே. அப்போது எண்ணங்களால் பாதிக்கப்படாமல் உள்முகப் பயணம் தொடரும்.

* * * *

## கனவுகள்

பக்தர்: நமக்குக் கனவு ஏற்பட்டால், முயற்சி ஏதுமின்றியே அதிலிருந்து நாம் வெளியேறி விடுகிறோம். இந்த வாழ்வும் கனவாக அமையுமானால், முயற்சி செய்து அந்தக் கனவை முடித்துவிட்டு ஞானத்தில் விழிக்க வேண்டும் என்கிறார்களே, அது எவ்வாறு?

பகவான்: கனவு காணும்போது அது கனவு என்ற எண்ணம் இல்லை. ஆகவே முயற்சி செய்து அதிலிருந்து வெளியேற வேண்டும் என்ற கடமை நமக்கில்லை. ஆனால் இந்த வாழ்வில் — தூக்க அனுபவம், படிப்பு ஆகியவற்றால் வாழ்க்கை என்பது ஒரு கனவு என்ற உள்ளுணர்வு உண்டாகிறது. ஆகவே முயற்சி செய்து அதலிருந்து நீங்க வேண்டியது நமது கடமை ஆகிறது.

டே பை டே பக் 76, 141

ஒவ்வொரு நாளும் நாம் விழிக்கிறோம், கனவு காண்கிறோம், ஆழ்ந்து உறங்குகிறோம். முடிவில் அவற்றைப் பற்றி என்ன அறிகிறோம்? ஒன்றுமில்லை, காலம் நகர்கிறது. நாமும் அதனை விட்டு விடுகிறோம். இந்த அனுபவங்களையும் அவற்றோடு தொடர்பு கொண்டவரைப் பற்றியும் நாம் சிந்திக்க வேண்டாமா? நாம் இப்போது சிந்தித்துக் கொண்டிருப்பது கனவுகளைப்பற்றி. கனவுகள், நனவிற்கும் தூக்கத்திற்கும் இடையில் தோன்றுவன. அவை வரும், போகும் விழித்தவுடன் அவற்றைக் 'கனவு' என்று பெயரிட்டு ஒதுக்குறோம் கனவில் நோக்கும் போது அவை அநித்திய மானவை என்று

கருதுகிறோம். நனவு அனுபவம் நீண்டது, தொடர்ச்சியானது; ஆனால் கனவு அனுபவம் அவ்வாறில்லை. இந்த வேறுபாடு எந்த அளவிற்குப் பொருத்தமானது? கனவில் கூடப் பசித்தால் உணவு தேவைப்படுகிறது, உடல் நோய்வாய்ப்பட்டால் மருத்துவர் வருகிறார். கனவில், நனவு எந்த விதத்திலும் பொருத்தமானதாக இருப்பதில்லை. தூங்கச் செல்வதற்கு முன்பு நாம் நன்கு சாப்பிட்டாலும் சரி, அல்லது நல்ல உடல்நிலையில் இருந்தாலும் சரி, அது பற்றிக் கவலையில்லை. கனவில் பசியும், நோயும் ஏற்பட்டால் கனவு நிலையில் தான் உணவும் மருந்தும் தரப்பட வேண்டும். ஐம்பது வருட நனவு அனுபவம் கனவில் ஐந்தே நிமிடங்களில் நிகழலாம். ஏனெனில் நனவு, கனவு, தூக்கம் ஆகிய நிலைகளில் கால அளவைகள் வேறுபடுகின்றன. கனவும் நனவைப் போல வினையின் விளைவே. கனவுக்குக் காரணமான வினை, கனவு எவ்வளவு காலம் இருக்க வேண்டும் என்பதை நிச்சயிக்கிறது. நனவைப் போலவே கனவும் அனுபவிக்கும்போது உண்மையே. ரமணர் கூறும் எடுத்துக்காட்டு இங்கே குறிக்கத்தக்கது, ரமணாசிரமம் பழைய ஹாலில் ஒருவர் தூங்கிக் கொண்டிருக்கிறார். பல ஆண்டுகள் உலகைச் சுற்றிய பின் இந்தியாவிற்குத் திரும்பி திருவண்ணாமலை வருகிறார். ஆசிரமத்தில் நுழைந்து ஹாலுக்குள் நடக்கிறார். அந்த நேரத்தில் கனவு நீங்கி விழித்துக் கொள்கிறார். கனவில் அலைந்தது, துன்பப்பட்டது எல்லாம் பொய்யா? வினையின் விளைவால் துன்பம் கனவு நிலைக்கு மட்டும் மட்டுப்படுத்தப்பட்டது. நனவை நோக்கக் கனவில் அவர் துன்பம் அனுபவித்த காலம் மிகக்குறைவே. கனவு காணும்போது உண்மையாகத் தோன்றிய

கனவு நிலை விழித்தவுடன் பொய்யாகத் தோன்றுகிறது. அதுபோலவே நனவிலிருந்து வேறுபட்ட எந்த நிலை அனுபவமும் அது பொய்மையைக் காணலாம். அவற்றையும் கனவாகவே நாம் கருதலாம். இதனைத்தான் சாத்திரங்களும் கூறுகின்றன. சத்குருவும் குறிப்பிட்டுச் சொல்கின்றனர். நனவு, கனவு, தூக்கம் ஆகிய மூன்று நிலைகளுக்கும் அப்பாற்பட்டு நான்காவதாகத் துரியம் என்று ஒரு நிலை கூறப்படுகிறது. அதுவே இயல்பானது, அதனை எல்லோரும் உணரலாம் என்று ரமணர் நம் கவனத்தை ஈர்க்கிறார்.

கனவிலிருந்து அந்த இயற்கை நிலைக்குச் செல்வதற்கு ஏதேனும் வாய்ப்புண்டா? இல்லை. ஏனெனில் கனவுகள் தாமாகவே வந்து, தாமாகவே முடிகின்றன. அவை நிகழும்போது தனிமனித சங்கற்பம் ஏதும் இல்லை. இந்த நோக்கத்திற்காக ஆழ்ந்த உறக்கத்தைக் கூட நீக்க வேண்டியதுதான். ஆழ்ந்த உறக்கத்தில் மனம் அறியாமையில் மூழ்கிவிடுகிறது. அதனால்தான், தூங்குபவரோ, கனவு காண்பவரோ முயற்சி ஏதும் செய்யக் கட்டாயம் இல்லை என்கிறார் ரமணர்.

நனவு நிலையைக் கனவோடு ஒப்பிடுவதால், கனவை முடிப்பதற்கு ஏன் முயற்சி தேவைப்படுகிறது என்று சில பக்தர்கள் ரமணரைக் கேட்கிறார்கள். அது தானாகவே முடியாதா? இது அவர்களது ஐயம். தவறான தர்க்கத்தின் அடிப்படையில் அது அமைகிறது. கனவுகள் முடியும்போது, அதைக் காண்பவன், அவை தொடங்கும்போது உள்ள

அறிவை விட அதிகமாக ஒன்றும் பெறுவதில்லை. துரிய நிலைக்குச் செல்லாத வரை, நனவு மெய் என்றும் கனவு பொய் என்றும் தான் நாம் கருதுவோம்.

மங்களகரமான கனவுகள் வாழ்வு முழுவதும் நம்மை பாதிக்கின்றன. ரமணாஸ்ரமத்தில் பால் பிரண்டன் கண்ட கனவை எடுத்துக் கூறலாம். பிரண்டன் ஐந்து வயது குழந்தையாக இருக்க மிகப் பெரிய வடிவில் ரமணர் அவரைக் கைப்பிடித்து மலை உச்சிக்கு அழைத்துச் சென்றார். மேலிருந்து கீழே நோக்கச் சொன்ன பொழுது மேலை நாடுகள் முழுவதும் பரந்திருக்கக் கண்டார். அதிலிருந்து சாதனையின் முழுவதும் அந்தக் காட்சியை அவர் மறக்கவேயில்லை. கே. கே. நம்பியார் தம் கனவினை வர்ணிக்கிறார். அவர் கனவில் ரமணர் தோன்றி புனிதப் பாடல்களை ஓதுவதில் நம்பியாருக்கு இருக்கும் நம்பிக்கையை உறுதிப்படுத்தினார். இக்கனவுகளெல்லாம் நல்வினையின் விளைவுகள். ஆனால் அவற்றை நாடிச் செல்வதில் அர்த்தமே யில்லை. ஏனெனில் கனவு நிலையில் ஆன்மீக வலிமை ஏதும் இல்லை. மேலும் சில கனவுகளை நாம் ஒப்புக்கொண்டால் அமங்கலமான மற்றவற்றையும் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

ஞானிகளுக்கு கனவு உண்டா? ஏன் இல்லை? என்பார் ரமணர். நனவும் தூக்கமும் இருக்குமானால் கனவும் அவர்களுக்கு உண்டு. ரமணர் ஒருசமயம் தாம் கண்ட கனவை விவரித்தார். அதில் சாட்விக், முதலியவர்களோடு அவர் மலைமீது சென்றார். இறங்கி வரும்போது இருபுறமும் மிகப் பெரிய

கட்டிடங்கள் உள்ள தெருவில் அவர்கள் நடந்து வந்து கொண்டிருந்தனர். அந்தத் தெருவையும் கட்டிடங் களையும் சாட்விக் முதலியோருக்கு காட்டிய ரமணர், 'நாம் காண்பது கனவு என்று கூறமுடியுமா?" என்று கேட்டார். அவர்கள் எல்லோரும் ஒரே குரலில், 'எந்த முட்டாள் அப்படிச் சொல்வார்? என்றனர். கனவு முடிந்ததும் கனவைப் பொறுத்த வரையில் ஞானிக்கும் நமக்கும் வேறுபாடு எதுவும் இல்லை என்பதை இது காட்டுகிறதா? மேலாக பார்த்தால் அப்படித்தான் தோன்றும். ஆனால் இடையிலுள்ள வேறுபாடோ மிக அதிகம். கனவு காணும் போது தாம் காண்கிறோம் என்றும், அந்தக் கனவு பொய் என்றும் ஞானிக்குத் தெரியும். தூக்கம், கனவு, நனவு ஆகிய மூன்றுமே நிலையற்ற மன இயக்கங்கள். அவை முழுமையான உணர்வை அடிப்படையாகக் கொண்டு இயங்குகின்றன. ஞானியோ அந்த முழுமையில் நிலைத்து நிற்கிறார்.

* * * *

# வாழ்வுக்கு முடிவு உண்டா?

ஜீவரஜனி: மரணத்திற்குப் பின் நம் வாழ்க்கை எவ்வாறு இருக்கும்?

பகவான்: முதலில் உங்கள் நிகழ்கால வாழ்வு பற்றி அறிந்து கொள்ளுங்கள். மரணத்திற்குப் பின் உள்ள வாழ்வு பற்றி ஏன் கவலைப் படுகிறீர்கள்? நிகழ்காலத்தை அறிந்து கொண்டால், எல்லா வற்றையும் தெரிந்து கொள்ளலாம்.

டே பை டே ப. 289

பெண்மணி: மரணத்திற்குப் பின் ஒருவரின் நிலை எவ்வாறு இருக்கும் என்பதை அறிய முடியுமா?

பகவான்: முடியும், ஆனால் எதற்கு அதை அறிய முயற்சிக்க வேண்டும்? எல்லாமே நாடுபவரைப் பொறுத்து உண்மையாகின்றன.

- டாக்ஸ் 276 பக். 232-33

ரமணரிடம் பிறப்பு, இறப்பு, மறுபிறவி ஆகிய வற்றைப் பற்றி கேட்கப்படும் கேள்விகளெல்லாம் அடிப்படையானவை அல்ல. கேள்வி கேட்பவர்கள் மரணத்திற்குப் பிறகு தொடர்ந்து வரும் உறவு பற்றி கவலைப்படுகிறார்கள். நம்முடைய பிள்ளையோ, மனைவியோ அல்லது நண்பரோ இறந்து போனால் அவர்களோடு கொள்ளும் உறவு தொடருமா என்ன? மரணம் என்பது உறவின் முடிவா அல்லது சாவிற்கு அப்பால் செல்லும் வழி ஏதாவது இருக்கிறதா? இந்த

உறவு அடுத்தப் பிறவியிலும் தொடருமா? ஏனெனில் பிறப்பு, வாழ்வு, சாவு எல்லாமே நமக்கு உண்மையானவை. நமக்கு விருப்பமான ஒருவரின் சாவை நாம் ஒதுக்கிவிட முடியாது. ரமணர் கேட்பார். 'பிறப்பதற்கு முன் உன் மகனைப் பற்றி நீ நினைத்தாயா, பின் ஏன் இறந்த பின் நினைக்கிறாய்? நான் என்ற எண்ணத்தின் பிறப்பே ஒருவருக்கு பிறப்பு; அதன் இறப்பே மரணம், என்று அவர் கூறுவார்.

இருப்பினும் மரனத்திற்குப் பின் உள்ள வாழ்க்கை பற்றிச் சாத்திரங்கள் கூறுவனவற்றை அவர் பொறுமையாக விளக்குவார். செயலை நாம் செய்கிறோம்' என்ற எண்ணம் இருக்கும் வரை எதிர்காலத்தில் பிறப்பும், இறப்பும் உண்டு. இதயத்தில் செயலற்றுக்கிடக்கும் சம்ஸ்காரங்கள் சாதகமான சூழ்நிலை வரும்போது வெளிக்கிளம்பும். நம் இந்தப் பிறப்பிற்குக் காரணமான சக்தியே மறுபிறவி மட்டுமின்றி மீண்டும் மீண்டும் வரும் பிறவிகளுக்கும் காரணமாகும். விசாரத்தால் விளையும் ஆத்ம அறிவே பிறவி மரத்தை வேரறுக்கும். அதுவரை பிறவி உண்டு. அகந்தை இறக்காமல், மற்றொரு உடம்போடு இணைகிறது. அது எவ்வாறு நிகழ்கிறது என்பதை ரமணர் நன்கு விளக்குகிறார். வினையின் விளைவால், பழைய உடலுக்கும், அகந்தை சேர இருக்கும் புது உடலுக்கும் இடையில் கடைசி நிமிடச் சண்டை உண்டாகிறது. சாகும்போது ஒருவர் விடும் கடுமையான மூச்சு இதனை உணர்த்தும். புது உடலுடன் இறுதியில் சேர்க்கை உறுதியான பின்னரே, பழைய உடம்புடன் ஏற்பட்ட தொடர்பு அறுகிறது. ஆகவே உடலோடு வாழும்போது கால இடைவெளி ஏதும் இல்லை. சிலர் பூமியில் வந்து

உடனே பிறக்கலாம். சிலர் வேறு உலகங்களில் சூக்கும உடம்போடு வாழ்ந்து விட்டு, வினையைத் துய்க்க பூமிக்குத் திரும்பி வருகிறார்கள். பிறப்பிற்குரிய இடைவெளி குறித்து ஏதும் சொல்ல முடியாது, ஆனால் கர்மத்தைத் துய்க்க மறுபிறவி என்பது நிச்சயம். எற்கனவே பெற்ற அறிவோடும் உணர்ச்சியோடும் (இதயத்தில் சேமித்தவை) அவர்கள் திரும்ப வருகிறார்கள். ஞானமாம் ஒளி பிறக்கும் வரை இறந்த காலம் என்பது விடைபெறுவதே இல்லை. ஆனால் இவையாவும் ஞானிக்குப் பொருந்தாது.

நிச்சயமாகத் தொடரும் உறவைக் குறித்து நாம் திருப்தி அடைவதில்லை. தற்சமயம் எதிர்கால உடல்களுடன் நமக்கு உறவு ஏதும் கிடையாது. தற்போதுள்ள உறவைக் குறித்தே எல்லாம் அமைகின்றன. தன் மகன் இறந்துவிட்டான் என்ற உத்திரப் பிரதேசத்திலிருந்து வந்த பெண்ணொருத்தி முறையிட்டாள். மரணத்துக்கு அப்பால் உள்ள வாழ்வு குறித்து ரமணர் கூறக் கேட்ட அவள், மரணத்திற்கு அப்பால் உள்ள வாழ்வை அறிவது சாத்தியமா என்று கேள்வி கேட்டாள். இறந்தவரோடு தொடர்புகொண்டு நடப்பதை அறிய முடியுமா என்பதே ஐயம். அதுபோன்ற கேள்விகளில் கவனம் செலுத்த வேண்டாம். காரணம், கேள்வி கேட்டவரே அநித்தியம் என்றார் ரமணர். இருப்பினும் கருணையோடு, துயரத்தால் பாதிக்கப் பட்டவருக்கு ஆறுதல் கூறுவார் அவர். டி. பி. ராமச்சந்திர ஐயர் ஒரு நிகழ்ச்சியைக் கூறியிருக்கிறார். ஆசிரமம் தபால் நிலையம் திறந்தவுடன், தங்கள் ஒரே மகனை இழந்த தம்பதியர் ரமணரிடம் வந்து, “எங்கள் மகனை

நாங்கள் அன்புடன் நேசித்தோம். அவன் இறந்த பிறகு மகிழ்ச்சியை இழந்து விட்டோம். எங்களுக்கு ஒரே ஒரு விருப்பம் உள்ளது. எங்கள் மகனை நாங்கள் அடுத்த பிறவியிலாவது சந்திக்க வேண்டும்," என்று கூறினர். "தந்தை, மகன், பிறவி ஆதியவற்றின் உண்மையான பொருளை முதலில் அறிந்து கொள்ளுங்கள்," என்றார் ரமணர். ஆனால் அத்தம்பதியரின் துயரம் நீங்கிய பாடில்லை. எனவே ரமணர், "இந்தப் பிறவியில் பார்த்தது போல அடுத்தப் பிறவியிலும் அவனைக் காண்பீர்கள் நிச்சயமாக," என்றார். ரமணர் அத்தகைய உறுதிமொழியை ஏன் அளித்தார் என்று டி. பி. ராமச்சந்திர ஐயர் கேட்டபோது, ரமணர் கூறினார், 'என்ன செய்வது? இல்லையேல் அவர்கள் நம்பிக்கை அழிந்து போகும். அப்போது அவர் பகவத் கீதையிலிருந்து ஒரு சுலோகத்தை எடுத்துக் காட்டினார். உண்மையை ஒருவர் எந்த அளவுக்கு ஏற்கிறாரோ அந்த அளவிற்குத்தான் அது வலியுறுத்தப்பட வேண்டும் என்பது அச்சுலோகத்தின் பொருள். இன்னொரு பக்தர் தன் மனைவியைக் கனவில் காண விரும்பினார். முதலில் ரமணர் அதை ஏற்காது போனாலும் அந்த பக்தர் வலியுறுத்திய போது அதை மறுக்கவில்லை.

பக்தர்களுக்கு ஆறுதல் சொல்லும்போது ரமணரது மாறாத பேச்சு இதுதான்: 'இறப்பது உடம்பே அதுவே மறுபடியும் பிறக்கிறது. ஆனால் நீங்கள் உடம்பா?' அறியாமையாகிய துன்பத்திலிருந்து நம்மைக் காக்க வந்திருக்கும் ரமணர் உண்மையை எடுத்துரைப்பதில் சளைப்பதேயில்லை. நாம் இந்த உடம்பு இல்லை என்பதே உண்மை. இறப்பற்ற நமது

இயல்பாகிய உண்மையை எடுத்துச் சொல்லும்போது, பிறப்பும் இறப்பும் இந்த உடலையே பாதி பன என்பதும் வலியுறுத்தப்பெறும். 'நான்' என்பது நாம் நினைப்பது போல் அன்று, நமது இருப்பின் முழுமை, உணர்வின் முழுமை அது பிறப்பதும் இல்லை, எனவே இறப்பதும் இல்லை. இடைவிடாத ஆத்ம விசாரம் படிப்படியாக இவ்வுண்மையை நமக்கு வெளிப்படுத்தும். நமது நிகழ்கால வாழ்விற்குப் பின்னால் உள்ள உண்மையைக் கண்டறியும் போது, இறந்தகாலம், எதிர்காலம் ஆகியவற்றோடு நமக்கு உள்ள எல்லாத் தொடர்புகளும் அறுந்து போகின்றன. பின் நமது உண்மையாகிய நித்தியத்துவத்தைப் பற்றிய விழிப்புணர்வு உண்டாகிறது.

* * * *

# நாம் எந்த அளவுக்குச் சுதந்திரமாக இருக்கிறோம்?

*தன் இச்சை என்பது நன்மை தரும் என்கிறது சாத்திரம். அது விதியை வெற்றி கொள்ள உதவும். ஞானத்தின் விளைவு அது.*

*- டாக்ஸ் 209 ப. 177*

ரமணர் முதன்முதலில் தம் தாய் அழகம்மைக்கே உபதேசித்தார். வினையின் வழியை ஏற்றுக் கொள்ளுமாறு அதில் அவர் கூறியிருக்கிறார். நடப்பது நடந்தே தீரும். நடவாதது என்ன முயற்சித்தாலும் நடக்காது. பல ஆண்டுகளுக்குப் பிறகு இதே தத்துவத்தை தேவராஜ முதலியாருக்கு எடுத்துக் கூறியிருக்கிறார். இவற்றிலிருந்து விதியை மாற்ற முடியாது என்பதே ரமணரின் கோட்பாடு என்று கருதக்கூடாது. அப்படியானால் சுதந்திரமான நம் இச்சை என்பது வாழ்விலே எந்த முக்கியத்துவமும் பெறவில்லை என்று ஆகிவிடும். இது ரமணரின் உபதேசத்திற்கு நேர்மாறானது. விதி என்று சொல்லும் போதே சுதந்திரமான நம் விருப்பத்தை அவர் அடிக்கடி வலியுறுத்திச் சொல்லுவார். கர்த்தா இருக்கும் வரை விதி, சுதந்திரமான விருப்பம் ஆகியவை ஒன்று சேர்ந்தே விளங்கும். விசாரத்தின் மூலம் கர்த்ருத்வம் அழியும் போது தான் அவை இரண்டையும் தாண்டிச் செல்லமுடியும்.

ரமணரைப் பொறுத்தவரையில் விதி என்பது உடலை மட்டுமே பாதிக்கும். நாம் உடல் என்று நினைப்பதால் இக்கருத்தை ஒப்புக்கொள்ள முடிவதில்லை. மனம் வேறு உடல் வேறு.

இதுபற்றி சற்று ஆழமாக சிந்திப்போம். முதலாவதாக 'இந்த உடம்பு ஏன் வந்தது?' என்று கேட்க வேண்டும். மகான்கள் வினையின் காரணமாகப் பிறப்பதில்லை. உலகின் நன்மைக்காக அவர்கள் உடலெடுக்கிறார்கள். தாம் விரும்பும் வரை உடலில் இருக்கிறார்கள். சாதாரணமாக நம் அனுபவங்கள் எல்லாம் வினையின் விளைவாகவே அமையும். அதனால் தான் குழந்தைகள் சாகிறார்கள், இளைஞர்கள் சாகிறார்கள், திடீர் சாவு ஏற்படுகிறது. இது குறித்து பலர் கேள்வி கேட்கலாம். கர்மம் முடிந்து விட்டால் வாழ்வு முடிந்து போகும். தொடர்புடைய ஒரு கர்மத்தின் செயல்முடிவில் உடலும் முடிந்து போகிறது. மனத்தின் ஆற்றல் குறையாமல் இருக்கலாம், உடல் நலம் சிறப்பாக இருக்கலாம், ஆனால் கர்மம் முடிந்து விட்டால் சாவு காத்திருக்க முடியாது.

இதை இன்னொரு கோணத்திலிருந்து நோக்குவோம். உடம்பிலிருந்து எப்படி விலகி வாழ்வது என்பதைப் மகான்கள் தங்கள் வாழ்க்கையில் நிரூபித்திருக்கிறார்கள். உடலின் துன்பத்தால் அவர்கள் பாதிக்கப்படுவதே இல்லை. ரமணர் புற்று நோயால் பதினைந்து மாதங்களுக்கு மேல் துன்பப்பட்டார். ஆனால் அதுபற்றி அவர் ஒரு போதும் முறையிட்டதில்லை. சாட்விக் வலி பற்றி கேட்ட போது 'இல்லை' என்று சொன்னவர், 'வலி இருக்கிறது ஆனால் அது உடலுக்கே என்றூர். அதனால் தான் ஏப்ரல் 14, 1950ல் அவர் உடலை நீத்த நாளில் கூட அவருடைய தெய்வீக ஒளியும் கவர்ச்சிகரமான புன்னகையும் மாறவேயில்லை.

மனம் வேறு உடல்வேறு, கர்மம் உடலுக்கே உரியது என்றால் மனமும் ஏன் வினைவயப் படுகிறது என்று கேட்கலாம். சேர்க்கையே இதற்குக் காரணம். இறந்த கால விசையிலிருந்து மீளமுடியாமல், விதியால் உடலுக்கு வருவனவற்றைத் தனக்கு உரியனவாகக் கருதி மனம் துன்பத்தால் பாதிக்கப்படுகிறது. அதிலிருந்து விலகினால் விதி நம்மைப் பாதிக்காது. மனம் எதையும் பெரியதாக்கும் அல்லது எதையும் எதையும் சிறியதாக்கும். மனத்தின் சக்தியை வைத்துக் கொண்டுதான் நாம் காரியங்களைச் செய்கிறோம். நம் விருப்பப்படி நாம் நடக்கலாம். திருமதி தேசாய் கீதையை எடுத்துக் காட்டி, ஒருவர் ஒரு வேலையைச் செய்ய விதிக்கப்பட்டிருக்கிறார் என்று எண்ணும் போது அங்கே சுதந்திரம் என்ற கேள்விக்கே இடமில்லையே என்று ரமணரிடம் கேட்டார். விதி என்பது உடல் அனுபவம் மட்டுமே. உடல் அதை அனுபவிக்கட்டும். துன்பம், இன்பம் இரண்டிலிருந்தும் நாம் விலகி நிற்க வேண்டும். சுதந்திரத்தைப் பயன்படுத்தி நாம் உடலைச் சார்ந்து நிற்கும் போக்கை நீக்க வேண்டும்.

ஆன்மீகப் பயிற்சியின் மூலம்தான் இந்த நிலையை உருவாக்க முடியும். வாயிற்படியிலேயே சுதந்திரம் இருக்கிறது. விருப்பத்தை சுதந்திரமாகப் பயன்படுத்தி நல்ல காரியங்களை நல்ல வழிகளில் செய்ய வேண்டும். இல்லையேல் நீதி நெறிகளுக்கு அர்த்தமேயில்லை. நன்மை - தீமை, துன்பம் - இன்பம், பந்தம் - முக்தி ஆகிய வேறுபாடுகளை நாம் அறிய வேண்டும். வினையின் விளைவுகளிலிருந்து தப்பமுடியாது என்பது மனத்தின் செயல். 'நான் தான் கர்த்தா' என்ற எண்ணம் இருக்கும் வரையில்

மற்றவற்றிற்கு இடமில்லை. சுதந்திரமாக செயல்களைச் செய்ய வேண்டும். மனத்தைத் தூய்மைப் படுத்தும் செயல்களில் சுதந்திர இச்சையை வழிப்படுத்தினால், விதியின் விளைவுகளிலிருந்துத் தப்பலாம்.

ஒன்றைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும். இங்கு மனத்தைத் திருப்புவதால் வெற்றி நிச்சயம் என்று கருதக் கூடாது. ஒரு பக்தர் ரமணரிடம் தான் பெற்ற தோல்விகளை வரிசையாக எடுத்துக்கூறினார். வெற்றி வந்தாலும் சரி தோல்வி வந்தாலும் சரி அதனைச் சமமாகப் பாவிக்கும் மன வலிமை கிடைக்கும் என்று ரமணர் தெளிவுப் படுத்தினார். மனவலிமை என்பது வெற்றியை எப்போதும் தராது. ஏனெனில் வெற்றியும் தோல்வியும் விதியால் ஏற்படுபவை. ஆனால் சுதந்திர விருப்பம் அவற்றை நடுநிலைமையோடு நோக்கி சக்தி இழக்கச் செய்து விடுகிறது.

விதியும் விருப்பமும் யாருக்கு? கட்டுப்படுபவர் யார்? விடுதலைப் பெறுபவர் யார்? இந்த கேள்விகளைக் கேட்டுத் தான் ஆகவேண்டும். தொடர்ந்த விசாரத்தால் கர்த்திருத்வம் அழிந்து போகிறது. பின்னர் விதியும் சுதந்திரமும் வேரறுக்கப்படுகின்றன. ஏனெனில் அவனுக்குத் தனி இருப்பு இல்லை. எஞ்சி நிற்பது ஆத்மா மட்டுமே. அது எப்போதும் விடுதலைப் பட்டே நிற்கும்.

* * * *

## எண்ணங்களும் மகிழ்ச்சியும்

பக்தர்: நினைவுற்ற நாள் முதல் உடல்நோயும் மனக் கவலைகளும் என்னை வருத்திக் கொண்டே யிருக்கின்றன.

பகவான்: கஷ்டப்படுவதே நமதியல்பாயிருந்தால் சுகத்தை விரும்புவோமா? ஆனால் விரும்புகிறேமல்லவா! இது சுகமே நமது இயல்பு என்றும் குறிக்கிறதல்லவா!

- டாக்ஸ் 633, ப. 593-594

தூக்கத்தில் நாம் சந்தோஷமாக இருக்கிறோம். ஏனெனில் நம் மகிழ்ச்சியைச் கலைக்க எண்ணங்கள் ஏதும் அந்நிலையில் இல்லை. பகல் முழுவதும், ஏன் வாழ்க்கை முழுவதுமே நாம் தூங்க விரும்புவதில்லை. விழித்திருக்கும்போதே சுகம் பெற வேண்டும். ஆனால் தூக்கம் என்பது எண்ணங்கள் இன்மையை மகிழ்ச்சியோடு தொடர்பு படுத்துகிறது. துன்பம் என்பது தேவையில்லாத எண்ணங்களின் இருப்பே என்கிறார் ரமணர். பலவீனமான மனத்தால் அவற்றைத் தள்ள முடியவில்லை. துயரத்தைத் தரும் எண்ணத்தோடு வாழ வேண்டியிருக்கிறது. சில சமயம் எண்ணங்களால் ஏற்படும் குழப்பம் தாங்க முடிவதில்லை. எண்ணங்கள் ஒவ்வொரு வாழ்விலும் நம்மைத் தொடர்கின்றன. ஒவ்வொரு செயலும் இதயத்தில் வித்துவடிவில் நினைவு எச்சத்தை விட்டுச் செல்கிறது. அது எந்த நேரத்திலும், பெரும்பாலும் எதிர்பாராத வண்ணம், செயலாக வளரலாம். நாம் விரும்பும் பொருள்களும், சூழ்நிலைகளும் மாறிக்கொண்டே இருக்கின்றன; ஆனால் இறந்த

காலமோ வாசனை வடிவில் நம்மை எதிர்த்திசையில் இழுக்கிறது. உதாரணமாக, நாம் பக்தி வழியில் செல்ல விரும்புகிறோம் என்று வைத்துக் கொள்வோம். நம் நிலையில் தங்கியிருக்கும் இறந்தகால அனுபவங்கள், தற்போதைய எண்ணங்களை எதிர்த்திசையில் வேறு ஒரு எண்ணக் கூட்டமாகத் தாக்கும்: அப்பொழுது நிகழும் போராட்டத்தில் வெறுப்பும், துயரமுமே மிஞ்சும். தியானத்திற்கு ஒதுக்கும் நேரத்தை முழுவதும் பயன்படுத்த முடியாது முன்னேற்றம் தடைப்படுகிறது. இது தொடர்ந்து நடக்கிறது. நமக்கு மிகவும் வேண்டிய ஒருவர் இறந்து போனாலும், பாசம் முடிவதில்லை. எனவே நாம் மறக்க நினைத்தாலும், அந்த மனிதரைப் பற்றிய நினைவு நம்மைச் சூழ்ந்து கொள்கிறது. சந்தோஷமும் இப்படித்தான். மகிழ்ச்சியான எண்ணங்களால் உண்டாகிறது. இவ்வாறு மகிழ்ச்சியும் துயரமும் மாறி மாறி வருகின்றன. அவை எப்போதும் கலந்தே காணப்படுகின்றன. எண்ண உலகில் துயரம் கலந்த மகிழ்ச்சி உண்டே தவிர, தூய்மையான சந்தோஷம் கிடைப்பதில்லை.

மனத்தின் எல்லைக்குள்ளேயே நின்று நிலையற்ற சுகத்திலிருந்து நீங்கி நிலைத்த சந்தோஷம் கிடைக்குமா என்ற கேள்வி எழுகிறது. சாத்தியமே, ஆனால் ஓர் எல்லை வரைதான். சத்சங்கம், தெய்வ வழிபாடு, பிராணாயாமம் போன்ற வழிகளால் மனம் தூய்மையாகி மனம் வலிமை பெறும். துயரத்தை விளைவிக்கும் எண்ணங்களை நீக்கக்கூடிய சக்தி பெறும். விரும்பிய எண்ணங்களில் நீண்ட நேரம் இருந்து மகிழ்ச்சியை அனுபவிக்கும் விருப்பங்கள்

முடிந்தவுடன் சிறிது காலம் மனம் அசைவற்று நிற்கும். பின்னர் அது ஆத்மானந்தத்தைப் பிரதிபலிக்கும்.

வலிமையான, தூய்மையான மனம் இவ்வாறு மகிழ்ச்சியாய் இருக்கும் தன்மையைப் பெறும்போது அந்த ஆற்றல் நிச்சயமற்ற, பிற நிகழ்ச்சிகளால் அமையக்கூடிய ஒன்றாக இருக்கிறது. சிலசமயம் நாம் சூழ்நிலைகளால் பாதிக்கப் படுகிறோம். இதற்கான எடுத்துக்காட்டுகளை, 'டாக்ஸ், என்ற நூலில் காண்கிறோம். இவை அத்தகைய சூழ்நிலைகளில் ரமணருடைய வழிகாட்டும் தன்மையையும் எடுத்துக்காட்டுவன. பாதகமான சூழ்நிலைகளால் பாதிக்கப்பட்ட பரோடா மகாராணி ரமணரிடம் வந்து ஆசிகள் கேட்டார். ரமணர் ஓர் அன்பரைக் கூப்பிட்டு முருகனாரின் ரமணசந்நிதி முறையிலிருந்து சில பாடல்களைப் படிக்கச் சொன்னார். அவை அவளுடைய அப்போதைய மனநிலைக்கு நன்கு பொருந்தின. அவள் மெதுவாகச் சமநிலையை மீண்டும் பெற்றாள். அப்போது குருவிடம் சரணடைவதால் விளையும் நன்மைகள் பற்றி எடுத்துக் கூறி அதற்காக முயற்சிக்குமாறு ரமணர் வலியுறுத்தினார். மைசூர் மகாராஜா ரமணருடைய வாழ்க்கையையும் உபதேசங்களையும் படித்தவர். ரமணரிடம் பெருமதிப்புக் கொண்டவர். இருப்பினும் அவரால் மகரிஷியிடம் நீண்ட நேரம் இருக்க முடியவில்லை, பதினைந்து நிமிடங்களே தங்கியிருக்க முடிந்தது. ரமணர் அவருடைய தேவையையும் அவசரத்தையும் புரிந்துகொண்டு அவர் மீது அருளைச் சொரிந்தார். மகாராஜாவும் மகிரிஷியின் மௌனத்தை அனுபவித்தார்.

அலகாபாத்தைச் சேர்ந்த பன்னலால் என்பவர் அமைதியைத் தேடி ரமணரிடம் வந்தார். அவருக்கு மகிழ்ச்சியின் இயற்கைத் தன்மையை ரமணர் வலியுறுத்தினார். ஆகவே மனத்தின் பரப்பினுள் நாம் தங்கியிருக்கின்ற வரையில் மனம் நமக்கு எதிராக இருக்கும் என்பதை இவையெல்லாம் எடுத்துக்காட்டுகின்றன.

எண்ணங்கள் அற்ற நிலைக்குச் செல்வதில் தான் உண்மையான தீர்ப்பு அமைகிறது. மனம் தனது மூலஸ்தானத்தில் தங்கியிருக்கும் போது எண்ணங்களாகிய சுமை அகற்றப்படுகிறது. ஓர் இளம் அணில் தனது கூட்டிலிருந்து வெளியே வருவதற்காக காத்திருந்தபோது ரமணர் கூறினார், 'எல்லோரும் வெளியே வர நினைக்கிறார்கள் அதற்கு ஒரு எல்லையே இல்லை. மகிழ்ச்சி என்பது உள்ளே இருக்கிறதே தவிர வெளியில் இல்லை'. வெளிச் கிளம்பும் மனம் பொருள்களில் மகிழ்ச்சியைத் தேடுகிறது. மனத்தை உள்திருப்பி எதிர் திசையில் நம்மை நோக்கச் சொல்லுகிறார் ரமணர். நம்மை நாம் உடலோடும் மனத்தோடும் தவறாகச் சேர்த்து பார்க்கின்றவரை மகிழச்சியைத் தேட வேண்டியது இன்றியமையாதது ஆகிறது. "காதல் பைத்தியம் பிடித்த ஒருவன் ஒரு விலைமகளைக் கற்புடையவள் என நினைப்பதைப் போல மகிழ்ச்சியை மனிதர்களிடமும் நிகழ்ச்சிகளிடமும் நாடி நிற்கிறோம். மனத்தை எண்ணங்களிடமிருந்து விடுதலை செய்து சரியான பாதை தேர்ந் தெடுக்கப்பட வேண்டுமானால் அறியமையை நீக்க வேண்டும்.

தடையாக நிற்பவை எண்ணங்களாகிய திரைகளே. மனத்தை அமைதிபடுத்த முயற்சிகள்

செய்யப்படவேண்டும். சரியான வழிகள் அனுஷ்டிக்கப்பட்டால் துயரமில்லாத மகிழ்ச்சி வந்தே ஆகவேண்டும். ரமணர் அடிக்கடி சொல்லுவதைப் போல மகிழ்ச்சி என்பது இயற்கையானது, துன்பம் என்பது அப்படியன்று. நோயின்மை என்பது சாதாரணமானது. ஆனால் நோய் என்பது அப்படியன்று என்பதைப் போல, மகிழ்ச்சியைத் தேடுவது என்பது இயற்கையானது. இல்லையேல் நாம் துயரமாக இருப்பதிலேயே திருப்திப்பட்டு இருப்போம். தலைவலி நீங்கி உடல் நலம் பெற விரும்புவதைப் போலத் துயரம் நீங்கி இயல்பான மகிழ்ச்சியை அடைய நினைக்கிறோம்.

எண்ணங்கள் அற்ற நிலையை அடைய எளிய நேரிடையான வழி ஆத்ம விசாரமே. தடையாகும் எண்ணங்களிலிருந்து விழிப்பாக இருந்து கவனமான ஆத்ம விசாரத்தால் நாம் உள்நோக்கிச் செல்லவேண்டும். அக ஆனந்தத்தின் சுவை அதிகமாகக் கிடைக்கும் போது உலகியல் இன்பத்தை நாடிச் செல்லும் போக்கு அற்று போகிறது. பழைய வழிகளில் உள்ள குறைபாடு தெலிவாகத் தெரிகிறது. சிறு ஓடையாகத் தொடங்குவது, ஜீவ நதியாக நிரம்பி, இறுதியில் பெரிய ஆனந்தக் கடலாக நிறைவு பெறுகிறது.

* * * *

# குரு தேவையில்லை என்று யார் சொல்வது ?

திலிப் குமார் ராய் : எல்லோரும் குருவின் நெறிப்படுத்து அவசியம் என்று கூறுகின்றனர். ஆனா குரு தேவையில்லை என்று பகவா கூறியிருக்கிறீர்கள்.

பகவான்: நான் அப்படிச் சொல்லவே இல்லை. கு என்பவர் எப்போதும் மனித வடிவி இருக்க வேண்டியதில்லை.

ராய் : ஆனால் பகவானுக்கு குரு யாரு இருந்ததாகத் தெரியவில்லையே.

பகவான் குரு மனித படிவில் இருக்க வேண்டி அவசியம் இல்லை என்று ஏற்கெனவே கூறப்பட்டுள்ளது. உள்ளிருக்கும் ஆத்ம கடவுள், குரு ஆகிய மூவருமே ஒன்றுதான
டே பை டே ப.2

ரமணருக்கு மனித குரு யாரும் இல்லை ஞானியாகிய அவருக்குத் தம்மினும் வேறுபட்டவ யாரும் இல்லை. எனவேதான் அவர் வழியை தேர்ந்தெடுத்தவர்க்குத் தாம் சத்குரு என்பதை அவரால் ஒப்புக் கொள்ள முடியவில்லை. விளைவு ரமணருக்குக் குரு என்பவர் யாரும் இல்லை அவரும் யாருக்கும் குரு இல்லை. இது தவறு. ஏன் பிறக்கும்போதே அவர் இதயத்தில் அருணாசல பிரகாசித்தார். 'அருணாசலம்' என்ற சொல்லை உறவினர் கூறியபோது, அதுவே அவருக்கு தீட்சையாக அமைந்தது. அருணாசலத்தின் மீது அவ

எழுதிய தோத்திரப்பாக்கள், அருணாசலரே ஆத்மா உள்ளிருந்து அவருக்கு குருவாக விளங்கினார் என்பதை உணர்த்தும். தம்மைக் குருவாக நினைத்தவர்க்கு அவர் அவ்வாறு விளங்கினார். தம்முடைய பெயராலும், உருவத்தாலும் கவரப்பட்டவர் அவருடைய பக்தர்கள் என்று அவரே கூறியிருக்கிறார். ஆத்ம விசாரத்தில் ஈடுபட்டு ஆன்மீகப் பயிற்சியில் செல்பவர்க்கு அவர் குருவாக விளங்குகிறார். அப்போது அமைதி தவழும் சூழ்நிலையில் அவரது ஊடுருவிச் செல்லும் நோக்கினால் அல்லது கடைக்கண் பார்வையால் அல்லது மௌனத்தால் தீட்சை தரப்படுகிறது.

குரு என்பவர் யார்? அவரது வேலை என்ன? சிலர் எல்லாப் பொறுப்புகளையும் அவரிடம் விட்டு விட நினைக்கிறார்கள். கோட்பாடுகளை அறிந்தாலும், பயிற்சி செய்யமுடியாத அளவிற்கு பலவீனமான மனம் படைத்தவர்களும் உண்டு. விசாரத்தைத் தொடர்ந்து செய்து, அதற்குரிய பலன் குருவருளால் விளைகிறது என்று இருப்பவர்கள் மூன்றாவது வகை. இவர்கள் எல்லோருமே குருவால் வழிகாட்டப் பெறுகிறார்கள்; ஆனால் குருவிடம் கூடியவரை சரணாகதி அடைந்து தேவையான முயற்சி செய்பவர்கள் மட்டுமே அதிக அளவில் பயன் பெறுகிறார்கள். அவர்கள் மனம் விரைவில் தூய்மை அடைகிறது. இயல்பாம் அமைதிக்குச் சீக்கிரம் திரும்புகிறார்கள்.

ரமணருடைய மென்மையான, ஆனால் உறுதியான வழிகாட்டுதலில் குருவின் பங்கைச் சிறப்பாக உணர முடிகிறது. சிலவற்றை எடுத்துக் காட்டலாம், பக்தர் விரும்பும் வழியில் அழைத்துச்

செல்லுவதுடன், அவர்களை ஆத்ம விசாரம் செய்யவும் உற்சாகப்படுத்துவார். ஒரு முறை அவர் கூறினார், "ஒரு கார் வேகமாகச் சென்று கொண்டிருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். அதை உடனே நிறுத்துவதோ, வேறு திசையில் திருப்புவதோ ஆபத்தான விளைவுகளை உண்டாக்கும்." உத்தரப் பிரதேசத்திலிருந்து வந்த பன்னலாலை எடுத்துக்கொள்வோம். ரமணர் உபதேசத்தால் கவரப்பட்ட அவர், அதே சமயம் தம் குரு உபதேசித்தபடி ஹரிநாம ஜபத்தையும் செய்து வந்தார். எனவே ஹரி நாம் ஜபத்தை விடுவதா அல்லது ரமணர் உபதேசித்த விசார மார்க்கத்தை விடுவதா என்ற ஐயம் அவருக்குள் எழுந்தது. அவர் ரமணரிடமே நேராக அது பற்றிக் கேட்டார். ஒரு பத்திரிகையில் வெளிவந்த நாமதேவர் பற்றிய கட்டுரையைப் படிக்கச் சொன்னார் ரமணர். விசாரத்தின் பயன்பாட்டையும், ஹரி நாமத்தில் அவருக்கிருந்த நம்பிக்கையையும் உறுதிப்படுத்தியது அது. சமையலறையில் இருந்த பழைமையாளருக்கு பாராயணமோ, புனித நூல் பாராயணத்தையோ செய்யும்படி வலியுறுத்துவார் ரமணர். ஒன்றுமே புரியவில்லை என்று சொன்னபோதும் சம்பூர்ணம்மாவிற்கு ரிபுகீதையைப் பாராயணம் செய்யும்படி அறிவுரை சொன்னார். அது போல லோகம்மாவிற்கு வாசுதேவ மனனத்தை கொடுத்தார். ஒன்றுமே நினைவில் நிற்கவில்லை என்று அவ்வமமையார் முறையிட்டபோது, "நினைக்க வேண்டியதை மறக்கிறோம், மறக்க வேண்டியதை நினைக்கிறோம், என்று நகைச்சுவையோடு பதிலலித்தார் ரமணர்.

விசாரம் ஒழுங்காகச் செய்யப்பட வேண்டும் என்று கவனம் எடுத்துக் கொள்வார் ரமணர்.

உபதேச சாரத்தில் விசார மார்க்கமாம் நேரான பாதையை விளக்கும்முன்னர், பல மரபுவழிப்பட்ட மார்க்கங்களை அவர் விளக்குகிறார். மனத்தைத் தூய்மைப்படுத்த விசார மார்க்கமே போதும் என்று ரமண கீதையிலும் கூறுகிறார். இருப்பினும் மற்ற மார்க்கங்களாகிய துதிப்பாடல் பாடுதல், புனித யாத்திரை, தானம், தவம் போன்றவையும் மனத்தைத் தூய்மைப்படுத்துவதில் பயனுள்ளவையே என்று கார்ஷ்ணிக்கு ரமணர் தெளிவுபடுத்துவதையும் காண்கிறோம்.

குரு காட்டும் பாதையில் சீடன் மிகுந்த சிரத்தை வைக்க வேண்டும் என்று வலியுறுத்துவார் ரமணர். ஒரு சமயம் ஒருவர் குரு ஒருவரைப் பற்றிக் குறைகூறியபோது, "குருவை அளந்து மதிப்பிட உங்களுக்கு என்ன தகுதி இருக்கிறது? உண்மையில் குருவை விடச் சீடனே முக்கியமானவர்," என்று கூறி அப்பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தார் மகரிஷி. ஆழமான பக்தியே நம்மை மாற்ற வல்லது என்று சாத்திரங்கள் கூறவில்லையா? குரு பக்தி "ஊமையைக் கவிபாட வைக்கும், நொண்டியை மலை தாண்ட வைக்கும்."

ஆத்ம உணர்வு என்பது புதிதாக அடையப் பெறுவது அன்று, அது நமது இயல்பான நிலையே என்று எப்போதும் கூறுவார் ரமணர். பாதையில் செல்லும்போது மனத்தளர்ச்சி ஏற்பட்டால் ரமணரின் இந்த உபதேசம் சிறந்த மருந்தாக அமைகிறது. இந்தச் சூழலில் குருவின் வேலை, பாதையில் உள்ள தடைகளை அகற்றுவதே என்கிறார் ரமணர்.

சீடனைப் பக்குவப் படுத்தி உயர்த்தும் வேலையைக் குரு மேற் கொள்வதால், குரு கடவுளே

என்பது உறுதியாகிறது. குருவே நமது அகவலிமை, அவரே வாழ்வின் வழிகாட்டி என்று கூறும் கைவல்ய நவநீத வரிகளை அடிக்கடி விருப்பத்துடன் கூறுவார். கடவுளின் உள்ளிருப்பை நாம் உணர்வதில்லை. எனவேதான் அவர் மனித வடிவம் எடுத்துக் கொள்கிறார்.

குரு எப்போதுமே உயிர் வாழ்கிறார். தூல உடலை விடுவது. அவரது தொடர்ந்த சான்னித்தியத்திற்கு எந்த மாறுதலையும் உண்டாக்காது. இந்த உண்மையைத் திரும்பத் திரும்பச் சொல்லித்தான் ஆக வேண்டும். ஏனெனில் ரமணரைச் சத்குருவாக ஏற்பவர்க்கு இது தேவை. நம் இதயங்களில் இருந்து கொண்டு அவர் புரியும் அற்பதங்கள் எல்லாம் அவர்களுக்குத் தெரியாதா என்ன!

* * * *

# உள்முகப் பயணம்

பயணத்தைப் பற்றி நாம் பேசித்தான் ஆக வேண்டும். ஏனெனில் மௌனமாம் நமதியல்பை நாம் அறிவதில்லை. கட்டுப்பாடற்ற, குழம்பிய மனமே தொடங்கும் இடம். எண்ணங்களற்ற மனத்தின் நிலையே போய்ச் சேரும் இடம். ஆரம்பத்தில் மனம் பலவாறாகப் பிரிவுபட்டு நிற்கிறது. இறுதியில் இதயத்தில் ஒருமையே.

நோக்கம் தெளிவாகத்தான் இருக்கிறது. ஆனால் பாதையில் செல்லத் தயக்கம். இதற்கான காரணம்? மனம் ஒன்றே நமக்கு உணர்வின் மூலத்தானம். நாம் வாழ்கிறோம் என்பதற்கு அடையாளமே எண்ணங்கள்தாம். எண்ணங்களோடு விழிக்கிறோம். நனவு முழுவதும் மனம் செயல்படுகிறது. எண்ணங்கள் பலவகைப் பட்டாலும், அங்கு இடைவெளி இல்லை. தியானிக்கும்போது கூட, மனத்தின் இயக்கத்திலிருந்து விடுபட்டு, ஒரே எண்ணத்தோடு இருக்க விரும்புகிறோம். நம்மை மறப்பதால்தான் பல்வகை எண்ணங்களில் அலைக்கழிக்கப்படுகிறோம்.

மனோ நாசத்தை எண்ணும்போதே பயப்படுகிறோம். அது தொடர்பான உபதேசாரப் பாக்களைப் படிக்கிறோம்; டாக்ஸில் ரமணர் வாக்கிலிருந்தே தெளிவு பெறுகிறோம்; ஆனால் புரிந்து கொள்ள சிரமப்படுகிறோம் பிரண்டன் ரமணரிடம், மனத்திற்கு அப்பால் செல்வதால் உண்டாகும் பயத்தை வெளியிடுகிறார். சாட்விக் கூட தியானத்தில் ஏற்பட்ட பயம் பற்றிப் பேசுகிறார்.

இவ்வித பயத்தை உண்டாக்குவது மனமே. தர்க்கத்தால், பகுப்பாய்வால், அறிவு நிலையால் இதனைப் போக்க முடியாது. துணைக்கு ரமணரை நாட வேண்டும்.

பழக்க வசத்தால், நினைப்பது இயற்கை என்று நம்புகிறோம். ஆனால் உண்மை நேர்மாறனது. மௌனம்தான் இயல்பானதே தவிர, நினைப்புது அன்று. அந்நிலையில், தேவையானபோது மட்டுமே எண்ணங்கள் எழும், நோக்கம் நிறைவேறியதும் ஒடுங்கும்.

மனம் ஒடுங்கிய நிலையில் நாம் நினைவற்றுப் போய்விடுவதில்லை. மனத்தின் எல்லைக்குட்பட்ட உணர்வு போய் முழுமையான உணர்வு உண்டாகிறது. மனத்தைச் சந்திரன் என்றும், அதன் மூலத்தைச் சூரியன் என்றும் உவமித்துக் கூறுவார் ரமணர். தனது மூலத்தில் ஒடுங்கியிருக்கும் மனம் பகலில் விளங்கும் சந்திரன் போன்றது. சூரிய ஒளியைப் பெறும்போது சந்திரன் எதற்கு?

கருத்துக்கு வருவோம். இயேசு, புத்தர் ஆகியோர் வாழ்க்கை பற்றிக் கூறுவார் ரமணர். அவர்களது இயல்பான மௌனம், அவ்வப்போது எழுந்த எண்ணங்களுக்கு இடையூறாக இருந்ததில்லை. எண்ணங்கள் அவர்களுக்குச் செயல்பட்டு நோக்கம் மட்டுமே கொண்டவை. அவை தாமாகவே எழும், அதுபோன்றே விழும். ரமணர் வாழ்க்கையும் இதற்குச் சான்று பகரும். ரமணருடைய பள்ளித் தோழர் சாப் ஜான் பல அண்டுகள் கழித்து ரமணரைக் காண வருகிறார். ரமணர் அவரைத் தெரிந்து கொண்டு, பள்ளி நாட்கள் குறித்துப்

பேசுகிறார். ரமணர் நோய்வாய்ப்பட்ட போது தேவராஜ முதலியார், குருசாமி முதலியார் என்ற மருத்துவர் மகரிஷியைச் சந்திக்க ஏற்பாடு செய்தார். அச்சமயம் ரமணர் அவரைப்பற்றி விசாரித்தார். நோய்வாய்ப்பட்ட பக்தர் ஒருவர் ஹாலுக்கு வரமுடியாத போது அவர் உடல் நலம் பற்றி மென்மையாக விசாரிப்பார் ரமணர். காலையில் சமையலறை சென்று, சுவையான உணவினைச் சமைக்க உதவி செய்வார் அவர். சமாதி பற்றிச் சாது ஒருவருக்கு விளக்கிச் சொல்வார். ஆனால் தேவையானது சஹஜநிலையே என்று வலியுறுத்துவார். மாலை வேளைகளில் அவர் எல்லாவற்றையும் கடந்து, அமைதிக்கதிர்களைப் பாய்ச்சுவார். அவருடைய உறவு முறைகளில் ஒழுங்கும் முழுமையும் காணப்பட்டன. அவரது உறவு முற்றிலும் மனித நேயம் கொண்டது. இருப்பினும் அவரது மனம் இதயத்தில் வேரூன்றி நிற்கும். இதிலிருந்து நாம் அறிவது என்ன? உணர்வு என்பது மனத்தை அடிப்படையாகக் கொண்டது அன்று என்பதே. அது மனத்திற்கே வலிமை தரும் ஆன்மீக இதயத்திலிருந்து உற்றெடுப்பது. ஒருமுறை அங்கு சென்றால், நம் பேச்சு செயல் எல்லாமே இனிமையான இசைக்கச்சேரி போல அமையும். மனத்தின் ஆதிக்கம் முடிவதால், வெற்றிடம் உண்டாகாது. அனுபவம் பெற்றால்தான், தவறான கருத்துக்கள் அழியும். பின்னர் உலகில் செயல் புரிந்துகொண்டிருக்கும் போதே, அக ஆனந்தம் நிரம்பி வழியும்.

மனத்தில் மட்டுமே உணர்வு உண்டாகிறது என்ற எண்ணம் நீங்கினால், பாதிவேலை முடிந்து விட்டது.

மனத்திற்கு அப்பாற்பட்ட நிலையை எவ்வாறு சென்று அடைவது? ரமணரின் நேர் பாதையில் இதற்கான பதில் உண்டு. விசாரத்தால் எண்ணங்கள் முளையிலேயே கிள்ளி எறியப்படுகின்றன. பெயரும், உருவமும் பொருளற்றுப் போகின்றன. மனம் இருவகைப் படுகிறது எனலாம். 'நான் இருக்கிறேன்' என்ற தூய உணர்வு, 'நான் இதுவாக இருக்கிறேன்' என்று தொடங்கும் எண்ணங்கள். எண்ணங்களாகிய தடையைத் தகர்ந்து, மனத்தின் தூய உணர்வுப் பகுதியை அடைய முயற்சி தேவை. 'நான்' என்ற உணர்வில் தொடர்பு உண்டானால், அதுவே நம்மை அதன் மூலத்திற்கு அழைத்துச் செல்லும். ஆதாயத்தில் பறக்கும் பறவைகள் கூட்டிற்குத் திரும்புவதைப் போல, ஆறுகள் கடலில் கலப்பதைப் போல, தூய 'நான்' என்பது தனது மூலத்தில் உணர்வாம் முழுமையில் இயல்பாகவே சென்று சேரும். புவிஈர்ப்பு விசையைப் போன்று, உள் திரும்பிய மனத்தில் உணர்வு தானாகப் பிரதி பலிக்கும். மூலத்தின் காந்த சக்தி மனத்தை முயற்சியின்றியே இழுத்துக் கொள்ளும். ஆன்மிக இதயத்தில் பயணம் முடிகிறது. எல்லையற்ற ஆனந்தம் ததும்புகிறது.

* * * *

# புனித சந்நிதி

ஒரு ஆஸ்திரேலய இதழியலாளர் ரமணாசிரமம் வந்தபோது, மேலை நாட்டு சாட்விக் ஏன் அங்கு தங்கியிருக்கிறார் என்று அறிய விரும்பினார். சாட்விக்கிடமே அந்தச் கேள்வியை அவர் கேட்கவும் செய்தார். தாம் மன அமைதிக்காக அங்கு வந்து தங்கியிருப்பதாகச் சாட்விக் சொன்னபோது அவரால் அதை நம்பமுடியவில்லை. கண்ணுக்குத் தெரியாத அமைதிக்காகச் சாட்விக் எப்படி எல்லா வற்றையும் துறக்க முடிந்தது என்பது அவருக்குப் புதிராகவே இருந்தது. சாட்விக்கைப் போன்ற ஆயிரக் கணக்கான பேர்கள் ரமணரிடம் வந்ததற்கு, தற்போது வருவதற்குக் காரணம் அந்த அமைதியே. ரமண அஷ்டோத்தரத்தில், 'ஹ்ருத் சாந்தி கர சாந்நித்யாய நம:' என்று வருகிறது. 'இதயத்தில் சாந்தி அளிக்கும் சந்நிதி உடையவருக்கு நமஸ்காரம்' என்பது அதன் பொருள். சாந்தி என்பது அது ஏதோ எதிர்மறைப் பொருள் அன்று. எண்ணங்கள் அற்ற வெறும் ஸ்திர நிலை மட்டும் அன்று அது, ஏனெனில் தினம் தோறும் தூக்கத்தில் அத்தகைய நிலைகள் தோன்றுகின்றன. சில சமயம் மயக்கத்தில் கூட அது உண்டாகிறது. எனவே நாம் கூறும் அமைதி என்பது முற்றிலும் வேறுபட்டது. அந்நிலையில் ரமணர் கூறும் 'மரண அனுபவத்தைப் போன்று, நமது முழுச்சக்தியும் வெளிப்படுகிறது. அது சக்தி மிக்க 'ஸ்புரணம்'. இதயத்தில் ஆனந்தத்தின் முழுமையாக அதை உணரலாம்.

இறுதியாக ரமணர் பேசிய வார்த்தைகள், 'நான் எங்கு போக முடியும்? நான் இங்குதான்

இருக்கிறேன்,' என்பது. அவருடைய சந்நிதி அவர் உடலோடு இருந்ததைப் போன்று இன்றும் விளங்குகிறது. அந்த சன்னிதி அனுபவம் சாந்தி கூடிய சூழ்நிலையைத் தரும். அந்த ஆனந்தத்தை நாம் அறியாததால், அவர் சந்நிதியை எவ்வாறு, எப்போதும் உணர்வது என்ற கேள்வி எழும்.

பொதுவாக ரமணரோடு தொடர்பு என்பது ஸ்தூலமான ஈர்ப்பினால் தொடங்கும். நாமரூபத்தில் வேரூன்றிக் கிடப்பதால், ரமணரிடமிருந்து வரும் ஸ்தூலமான காந்த ஈர்ப்புச் சக்தி மிகவும் வலிமையானதாக உணரப்படும். அவருடைய அருள்வளைக்குள் வருபவர்களைத் தூய்மைப்படுத்தும் தூய 'அணுச்சக்தி' அது. இந்த உறவின் தூல அடிப்படையைக் கடப்பது கடினம். ரமணரின் மகாசமாதிக்குப் பின் அவருடைய பெயரும், ரமணாசிரமத்தில் அவரது புனித சன்னிதியும் உறவை வலுப்படுத்துகின்றன. ரமணருடைய புகைப்படமும் நம்மைக் கவர்கிறது. பார்க்கப் பார்க்கப் பரவசமூட்டும் ரமணரின் முகத்திலிருந்து நம் கண்களை எடுக்கவே முடியாது. நம்மை உடல் என்று நாம் கருதும் வரைப் பரம் பொருளை உடலில் வழிபடுவது என்பது இயல்பாகவே அமைகிறது.

தூல காரணத்தை ஒப்புக்கொண்டாலும், ரமணரது ஒளிமிக்க உடலோடு மட்டுமே கொள்ளும் உறவை நாம் தவிர்க்க வேண்டும். ரமண சத்குரு காலம், இடம், உடல் ஆகியவற்றைக் கடந்தவர். அவர் பக்தர்கள் நேசிக்கும் அந்த உடம்பன்று, எல்லாவிடத்தும் ஒளிரும் ஆத்மாவே. புற்றுநோய் வந்த போதும் பல வழிகளிலும் பக்தர்களுக்கு, தாம்

அந்த உடம்பன்று, நோய் தாக்குவது உடலையே, தம் அனந்த நிலையை அது எவ்வகையிலும் பாதிக்கவில்லை என்பதைப் புரிய வைத்தார்.

ஆனால் அவர் புகட்டிய இப்பாடத்தை நாம் புரிந்து கொள்ளவே இல்லை. எனவேதான் அவரது மகாசமாதிக்குப் பிறகு பலர் ஆசிரமத்திலிருந்து வெளியேறினர். மேலும் அவர் சந்நிதியில் கிடைத்த அமைதி வேறிடத்தில் கிடைக்கவில்லை என்று ரமணரோடு நெருங்கிப் பழகிய பக்தர்களும் முறையிட்டனர்.

உடல் நாம் என்ற எண்ணத்தை விட்டு, காலம்-இடம் என்ற தடையை எவ்வாறு கடப்பது என்ற கேள்வி எழுதல் இயல்பு. சத்குருவோடு கொள்ளும் உறவே நமக்கு விடுதலை தரும் என்று சாத்திரங்கள் கூறுகின்றன. ஆகவே ரமண சத்குருவோடு தொடர்ந்து உறவு கொள்ள வேண்டியது அவசியம். அதற்கான வழியைத் தேர்ந்தெடுப்பது தனமனித விருப்பத்தைப் பொறுத்தது, சத்குருவோடு கொள்ளும் உறவு என்பது இருவழிப்பாதை. ரமணரிடம் கொள்ளும் அன்பு என்ற நெருப்பை நன்கு மூட்டி, விடாது, எரியச் செய்ய வேண்டும். சத்குருவின் அருள் எப்போதும் வேலை செய்யும். நம்மை உள்ளே தள்ளி, அகப்பயணத்தில் வழிகாட்டும்.

ரமணரிடம் கொள்ளும் உறவு பலவிதப்படுகிறது, நமது குறை வேறுபாட்டால், பெங்களூரில் உள்ள ரமணர் கோயிலுக்கு வந்த திருமதி காமத் என்பவர் ஆத்மவிசாரம் செய்யத் தொடங்கினால், அவரது மனம் அலைபாயும், ஆனால்

ரமணரது உபதேசம் பற்றிய புத்தகத்தைப் புரட்டினால் மனம் உள்திரும்பி நிலைப்படுமாம். ரமணரது சொல் அவளை ஆட்கொண்டது. இவ்வாறு பலர் புத்தகங்களின் மூலம் ரமணரால் ஈர்க்கப்படுகின்றனர். பால் பிரண்டன் எழுதிய; 'ஸர்ச் இன் ஸீக்ரட் இந்தியா', ஆர்தர் ஆஸ்போான் எழுதிய 'ரமண மகரிஷியும் ஆத்ம விசாரமும்', கோஹன் எழுதிய 'குரு ரமணர்' போன்ற புத்தகங்கள் ரமணரிடம் வரக் கருவிகளாகப் பயன்படுகின்றன. ரமண இசையும், நாட்டியமும் ரமணபக்தியை ஊட்டி நம்மை ரமண சத்குருவிடம் அழைத்துச் செல்ல வல்லவை. ரமணரிடம் வர நாம் கொள்ளும் வழிதான் சிறந்தது, மற்றவை சிறப்புக் குறைந்தவை என்று எடைபோடக் கூடாது. தேவை ரமண சந்நிதியே. அதை நோக்கி எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் சரியானதே. ரமணரைப் பற்றிய எண்ணங்கள் மனத்தில் நிரம்பினால் போதும், ஒரு முகப்பட்ட மனத்திலிருந்து அப்பாற்பட்ட நிலைக்கு அது ஒரு படியே.

ரமணரின் தொடர்பிலிருந்து நம்மை விலக்கச் சூழ்ச்சி புரியும் மனத்தைக் குறித்து நாம் கவனமாக இருக்க வேண்டும். பல ஆண்டுகள் ரமண சந்நிதியிலேயே சாதனை புரிந்தும், புனிதப்பயணம் செல்லத் தமக்கு ஒரு மாற்றம் எவ்வாறு தேவைப்பட்டது என்று கோஹன் கூறுகிறார். ரமண சந்நிதியே போதும் என்பதை அவர் அறிவார், அதற்காகவே அவர் வீட்டைத் துறந்து வந்திருக்கிறார். இருப்பினும் புனிதப் பயண ஆசையால் அவர் ரமண சந்நிதியில் இருக்கும் அரிய வாய்ப்பை இழந்தார். உயர்ந்த அனுபவத்தைப் பெறக் கூடிய நிலையில்

சுவாமி ஆஷிஷானந்தா என்பவரை அவரது உறவினர்கள் ஆசிரமத்திலிருந்து அழைத்துச் சென்றார்கள். மீண்டும் அவர் அந்நிலையைப் பெறப் பல ஆண்டு சாதனை தேவைப்பட்டது. மனம் நம்மைப் பலவழிகளில் ஏமாற்றும்; இருப்பினும் நமது இருப்பாம் ஆனந்த நிலைக்குச் செல்ல அது ஒன்றே கருவியாக அமைகிறது. மனத்தில் உள்ள உணர்வுப் பகுதியாம், 'நான் இருக்கிறேன்' என்பது நமதியில்புக்குப் பாலமாக அமைகிறது. 'நான்' என்பதைச் சரியாகக் கவனித்தால், அதுவே நம்மை அகமுகப் படுத்தி நீண்டநேரம் நமதியல்பாம் சொரூப அனுபவத்தைத் தரும். இங்கு முன்னேற்றம் என்பது படிப்படியாக உண்டாகும் பக்குவத்தைப் பொறுத்தது. ரமணரிடம் கொள்ளும் உறவாம் 'உபாஸனை' யால் வருவது இது. மற்ற வழிகளோடு ஆத்ம விசாரம் சேர்க்கப் படலாம். அப்போது அந்த ஆன்மிக வழி வலிமை பெறும். நாம் அறியாமலேயே துவைதமாம் தடை நீங்குகிறது. தனிமனித சக்தி உலகப் பொதுமையில் கலக்கிறது. பின் நாம் எப்போதும் ஆன்மிக இதயமாம் ரமணரது அருள் வெளிக்குள் உண்மையாகவே நிற்கிறோம்.

* * * *

## எண்ணங்கள் படையெடுத்து வரட்டுமே.

வாழ்வு என்பது காலத்தில் நடக்கும் ஓர் இயக்கம். ஒவ்வொரு கணமும் அதில் வேறுபடுகிறது, உடல் ஒவ்வொரு நிமிடமும் மாறுகிறது. படைப்பில் எங்கும் வளர்ச்சியும் தேய்வும் இருக்கிறது. நிலையற்ற இத்தன்மை புரிந்தால், வாழ்வும் மரணமும் எதை உணர்த்துகின்றன என்று அறிய அவல் ஏற்படுகிறது. ஜனகர் தம் நாட்டு மக்களால் வனங்கப் பெற்றவர். தெய்வீகம் மாற்றும் வரை அவர் சாதாரண வாழ்க்கையே வாழ்ந்தார். ஒரு நாள் தோட்டத்தில், கண்ணுக்குத் தெரியாத சித்தர் சிலர் பாடுவதை அவர் கேட்டார். அவர்கள் பாடிய பாடலின் செய்தி, 'மிக நீண்ட வாழ்க்கை என்பது காலம் என்னும் கடலில் ஒரு நுரை' என்பதே.

கர்மத்தால் விளையும் காலத்தை எப்படி மிகச் சிறந்த முறையில் பயன்படுத்துவது? காலத்தை வென்று அழியாதிருக்க என்ன செய்ய வேண்டும்? காலத்தின் பிடியிலிருந்து விடுதலை நிச்சயம் உண்டு என்று உறுதிப்படுத்துகிறார் ரமணர். நமது இயல்பான நிலையில் நிலைத்திருந்தால் காலம் நம்மைக் கட்டாது. இந்த நிலை 'எல்லோருக்கும், எப்போதும், எல்லாச் சூழலிலும்,' கிடைக்கும். உண்மையை மறைப்பது எது? விசாரித்தால், எண்ணங்களாலான திரையே என்பது புரியும். முற்றுப் பெறாத செயல்களுக்குப் பிறந்த வாரிசுகளாக நாம் இருக்கிறோம். நம் செயல்கள் மனத்தின் ஒரு பகுதியால் அடக்கடி இடைவெளிகளுடன் செய்யப்படுகின்றன என்பார் ரமணர். மனம் பலவித எண்ணங்களால்

சிதறும்போது இச்சூழ்நிலை தவிர்க்க முடியாதது. சுகமான எண்ணங்களோடு மட்டுமே வாழ வேண்டும் என்ற எண்ணமும் கஷ்டத்தை அதிகமாக்குகிறது. அத்தகைய செயலின் விளைவுகள் அழியாத நினைவுகளாகி, இறந்த காலத்தை மனத்தில் தங்க வைக்கின்றன. அச்செயலே நிகழ்கால எதிர்காலச் செயல்களை வழி நடத்திச் செல்கின்றன. அத்தகைய எண்ணங்களை ரமணர் ஒருபோதும் வரவேற்க மாட்டார். 'அவற்றை அடைவது கடினம்,' ஆத்ம சாக்ஷாத்காரம் எனக்கில்லை,' 'நான் பல கஷ்டங்களைக் கடக்க வேண்டியிருக்கிறது' போன்ற எண்ணங்கள் நீக்கப்பட வேண்டும். அவை உண்மை அல்ல, அவை தடையும் கூட. ஏன் கவலைப்பட வேண்டும்? மற்றவர்கள் வெற்றி பெற்றிருக்கிறார்கள். பின் ஏன் நம்மால் மட்டும் முடியாது? ரமணவழியில், எண்ணங்கள் நிறைந்த இறந்தகாலம். ஒதுக்கித் தள்ளப்பட வேண்டும். அதில் இரண்டாவது சிந்தனையே கூடாது. எண்ணங்களால் ஆன படை குறித்து ஏன் பயப்பட வேண்டும். 'பொருள்கள் பல, ஆனால் எதிர்கொள்பவர் ஒருவர்தான்.' எனவேதான் எண்ணங்களை நினைப்பவர் மீது, செயலைச் செய்பவர் மீது கவனத்தைக் குவிக்கச் சொல்கிறார் ரமணர்.

நிகழ்ச்சிகளுக்கும் பின் புலத்தில் உள்ள உணர்வின் மீது கவனம் செலுத்தப்பட வேண்டும். **1911**ல் ஹம்ஃபரீஸ் பெற்ற உபதேசமும் இதுவே. 'மாறி வரும் நிகழ்ச்சிகளான வாழ்வு சாவு போன்றவற்றில் கவனம் செலுத்தாதீர்கள். அவற்றை காண்பது யார் என்று விசாரியுங்கள். நிலையான பொருளைப் பற்றி அல்லாத விசாரத்தில் ஈடுபட வேண்டும். நம் கவனம்தான் எண்ணங்களைப் போஷிக்கும். நம்மால்

முடிந்தவரையே எண்ணங்கள் செல்லும். மரத்தின் உயிர் அதன் வேரில் இருக்கிறது, அதன் கிளைகளில் இல்லை. அதுபோலவே நம் கவனமும். கவனிக்காவிட்டால் எல்லா எண்ணங்களும் உதிர்ந்து வாடிப் போகும்.

மனம், என்பது தனித்த சக்திமூலம்தானா என்று இங்கு சற்று சிந்திக்க வேண்டும். அன்றாட அனுபவத்தைக் கொண்டு நோக்கும்போது, மனம் என்பது தூக்கத்தில் இருப்பதில்லை. ஆனால் அப்போதும் நம் உணர்வு தொடர்ந்து செயல் படுகிறது. ஆகவே மனம் தன்னைப் பற்றி நிற்பதில்லை. அப்படியானால் நாம் எங்கிருந்து உணர்வைப் பெறுகிறோம்? ஆன்மீக இதயத்திலிருந்து என்கிறார் ரமணர், ஆகவே கவனத்தை எண்ணங்களிலிருந்து நினைப்பவனுக்கு மாற்றுதல் என்பது முடிவு ஆகாது. பாதையில் அது ஒரு படி, அவ்வளவே. இதயத்தின் காந்தப் பிரதேசத்திற்குள் நுழையும் வரை மனத்தின் மீது கவனம் செலுத்தப்பெற வேண்டும். விசாரத்தின் பாங்கு வாழ்வு முழுவதும் பரவி நிற்க வேண்டும். உள்ளே மூழ்கி, 'நான்' என்பதன் மீது தெளிவாகக் கவனம் செலுத்தப்பெறும் போது, இறுதியில் இதயத்தின் சக்தி ஆதிக்கம் செலுத்த ஆரம்பிக்கிறது. தனி ஆற்றல் உலகப் பொதுச் சக்தியில் கலந்துவிட, காலத்திற்கு அப்பால் நாம் செல்கிறோம். வாழ்வின் ஒருமையாம் விழிப்பிணர்வு ஏற்பட்டு நாம் புதிய பிறவி எடுக்கிறோம்.

* * * *

